உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௦] பிரஜோத்பத்திஸூ பங்குனிமீ [பகுதி-ரு.
Vol. XXX. March-April-1932. No. 5.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1932.

Printed by Srimathu Raja M. Dinakara Bahadur Avl, and published by Thiru. Narayana Iyengar, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

உ

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,<br>மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,<br>மானேஜர்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩0] பிரஜோத்பத்தி௵ பங்குனி௴ [பகுதி-௫.

Vol. XXX *March-April-1932.* No. 5.

## யவனமஞ்சரி.

### அரிஸ்தாதில் எழுதிய ஒழுக்க நூல்.

[௩௧௨-ம் பக்கத் தொடர்ச்சி.]

**நான்காம் பாகம்.**

எஞ்சிய அறங்களது ஆராய்ச்சி.

**முதல் அதிகாரம். ஈகை.**

அளவறிந்து செயல்செய்வது ஈகையென்றும். கொடுப்பதிலும் ஏற்பதிலும் சமனாயிருப்பது ஈகை; கொடுப்பதில் அளவிற்குறைதல் இவறல்; மிகுதல் வீண்செலவு. வீண்செலவு மற்றும் பல தீயொழுக்கங்களுக்குக் காரணமாகையால் கீழ்மையெனவும்படும். இவ்வாறு வீண்செலவுக்குக் குணவிரியைப் பெருக்குவது பிழையென்பது எமது அபிப்பிராயம். ஈகை என்னும் நற்குணமில்லாதவர் பணத்தை நன்முறையாக உபயோகியார். தகுந்தவாறு ஏற்பதிலும் தகுதியறிந்து கொடுப்பதே அறநிலை. அளவிற்குமேலதிகமாக ஏற்காததற்காக ஒருவனை உலகம் புகழ்வதை நாம் கண்டிலம். ஏற்பாரிலும் கொடுப்பார் அரியராகலான், ஈவாரை உலகு புகழ்கின்றது. உலகத்தவர்க்குப் பயன்விளைவதால், கொடை அறங்களிற் சிறந்தது. காலமும் இடமும் தகுதியும் ஆராய்ந்து கொடை அளிக்கப்படும். இக்கொடையால் ஈவோனுக்கு இன்பம் விளையும்; இன்பம் இல்லாவிடினும் துன்பம் வாராது. தகுதியற்றவனுக்குக் கொடுப்பது தன்னயங்கருதியாகையால், அக்கொடை நல்லறமன்று. மனவருத்தத்துடன் கொடுப்பதும் ஈகையன்று.

கொடையாளி தான் ஒருநன்மை பிறரிடம்பெறுவதற்கு ஈனுவான். அவன் தன் செல்வத்தைப் பிறர்க்குதவுதற்காகப் பாதுகாத்துக் கொடுக்கவேண்டியவர்க்கே கொடுப்பான். கொடுக்கும் நேரங்களில் தன்னை ஒறுத்தும் கொடுப்பான். ஈதலில் ஈயப்படுந்தொகை பெரிதாதல்பற்றி ஒருவன் நல்லவன் எனப் புகழப்படான். சிறுதொகை ஈவோரைச் சந்தர்ப்பம் நோக்கிப் புகழ்கிறோம். இனி ஈகையிற் பிரியமுடையோர் செல்வராயிருப்பது அரிது. இவற்றையெல்லாம் சுருக்கச்சொல்லில் ஈகை என்பது கொடுக்கவேண்டியார்க்குக் காலமறிந்து முறையறிந்து இன்பத்துடன் இனியவைகூறிக் கொடுப்பதேயாம். ஒருவன் மிகுத்தும் குறைத்தும் கொடுப்பானாயின் அவ் வேற்றத்தாழ்ச்சிக்கு ஏற்ப இன்ப துன்பம் நிகழும். ஈதல் செய்வோனை இலகுவாய் ஏமாற்றலாம். வீண்செலவுசெய்வோன் எது துன்பம், எது இன்பம் எனத் தெரியாமல், முறைபிறழ ஒழுகுவான். வீண்செலவு, கொடுப்பதில் மிகுதியாகிய ஓர் அந்தநிலை. அது ஏற்பதிலும் குறைவாகிய அந்தநிலை. இவறல், கொடுப்பதிற் குறைவும் ஏற்பதில் மிகுதியுமாகிய அந்தம். நீடித்தகாலம் ஒருவன் செலவுசெய்வானானல் செல்வம் குறையும். பொருள் குறைய வீண்செலவாளி கொடையேற்கவுந் தொடங்கி, அளவுகடவாது கொடுக்கவும் பழகிக்கொள்ளுகிறான். இத்தன்மைய வீண்செலவாளி கபவனிலும் எவ்வளவோ இழிந்தவன். ஆனல் சில வீண்செலவாளிகள் செல்வம் தேவைப்படுவதனல், திரவியந் தேடத்தொடங்கி வேண்டியவர்க்குக் கொடாது தம்மைப் புகழ்வார்க்கு மாத்திரம் கொடுப்பர். இவ் வீணர் சிநேகிதர் இடித்துரைத்துப் புத்திமதிகூறுந்தன்மையராயின், நல்லவராகவுங் கூடும்.

இவறல் மனிதனது இயற்கையாகையால், ஒருபொழுதும் மாறாது. வயதும் இவறலுக்குக் காரணமென்பர். ஒருசாரார் கொடுக்கும்போது குறையக்கொடுப்பர், உலோபரில் ஒருசாரார் தாம் சுத்தமாயிருக்கவேண்டுமென நினைத்துப் பிறர்பொருளை வெளவார். மற்றொருசாரார் பிறர் தம்பொருளை வெளவுவது இயற்கையென நினைத்துத் தாம் கொடுக்கும்போது குறைத்துக்கொடுப்பர். இவ் விருகட்சியாரும் பொருளைச் சேகரிக்கும் நோக்கமுடையவர். வேசையர்வீடுகள் நிறுவி அதன்மூலமாகப் பொருளீட்டுவோர் கபவரினும் இழிகுலத்தோராவர். அரசர் பெருநயங்கருதும்வேலைகளில் அவரைக் கொடுங்கோலரென்பேம்,

கொடுங்கோலரைக் கயவரென்பதிலும் தீயர் என்பதே முறை. வீண் செலவிலும் உலோபம் தீயது. சிறுகளவும் இவறல் எனப்படும்.

2-ம் அதிகாரம். வள்ளற்றன்மை.

பெருஞ்செலவில் அளவுகடவாதிருப்பவன் வள்ளல். தூதிற்செல் வோன்செலவுக்கும் யுத்தக்கப்பல்கட்டுவோன்செலவிற்கும் வெவ்வேறு தொகைவேண்டும் என்பதை அறிவோம். செலவிற் சிறப்புநோக்கியே எல்லை குறிக்கப்படும். செலவுசெய்யவேண்டியதருணத்திற் செய்யா விடின் அது ஒருவகைக் கீழ்மை. உதாரணமாக விருந்தோம்பலிற் செலவுசெய்யவேண்டும். சொற்பச்செலவுசெய்யவேண்டியவிடத்தில் அதிகமாகச்செய்தால், அது எளிமையாகும். எவ்விடத்தில் உரு வத்தைத் திருத்தவேண்டுமெனச் சிற்பனுக்குத் தெரிவதுபோல வள்ள லுக்கும் எத்தருணத்திற் செலவுசெய்யவேண்டுமெனத் தெரிதல் வேண்டும். வள்ளற்றன்மைக்கும் ஈகைக்கும் பேதம் செலவுசெய்யும் தொகையில் மாத்திரம். கோயில்கட்டுவித்தல் வேட்பித்தல், யாகஞ் செய்வித்தல், நடுகல் நடுதல் முதலியவற்றில் வள்ளல் செலவுசெய்வான். நன்னிமித்தங்களிலேயே செலவுசெய்தல் முறை. இச்செலவைச் செல்வ ரே செய்யத் தகுதியுடையோர். ஆகையால் வறியோன் செய்யத் தொடங்குவது மடமை. பணமும் குலமும் புகழும் உடையோரே இவ் வறத்திற்கு உரியார். பெருஞ்செலவுசெய்பவன் எச்செயலிலும் செம்மை நோக்குவான். அழகிய இல் ஒன்றை அமைப்பான்; புண்ணியச்செயல் களிற் காலத்தைப்போக்குவான். ஒருவன் தன் குழந்தைக்குப் பந்து களிற் சிறந்ததை வாங்கிக்கொடுப்பதும் சிறுதொகையாயினும் பெருஞ் செலவெனப்படும். வள்ளல் எனப் பேர் பெறுவதற்காகச் செலவுசெய்ப வன் ஒருபோதும் அப்புகழைப் பெறான். வள்ளன்மையில்லாதார் தீயா ரல்லர்.

3-ம் அதிகாரம். பெருந்தன்மை.

பெருந்தன்மை அரும்பெருஞ்செயல்களில் விளங்கும். இப்பண்பை ஆராய்வதும் பண்புடையோனை ஆராய்வதும் ஒன்றே. அழகுடையான் என்பதற்கு ஒருவனுக்கு உயரமுந் தோற்றமும் வேண்டப்படுவது போலப் பெருந்தன்மைக்குத் தகைமை இன்றியமையாதது. தகைமை

யில்லோன் பெருந்தன்மையினை யவாவுவது வீண். தகைமைக்குக் குறைய ஏற்பது சிறுமை. இங்ஙனம் தகுதியறிந்து ஒழுகுதலால் பெருந்தன்மை ஒரு சமனென எண்ணப்படும். பெருந்தன்மையில் மிகுதி இல்லாமையால் அது ஒரு அந்தம். புறப்பொருள்நன்மைகளிற் சிறந்தது மானமாகையால், பெருந்தகைமையுடையான் மானம் என்னும் புவனத்தில் வசிப்பவனுவன். மானம் ஏற்பதில் ஒருவன் மிக ஆசைப்படின் அப்பண்பு தருக்கெனப்படும். பண்புடைமை என்பது எல்லா அறங்களிலும் பெருமைபுடைமை. பண்புடையான் அநீதி செய்யான், நேர்மையாயிருப்பன். பெருந்தன்மையன் தீயனுயின் உலகம் எவ்வாறு அவனை மதிக்கும்? உண்மையாக மானத்தைக் காப்பாற்றிப் பெருந்தன்மைபூண்டு ஒழுகுவது அருமை. அறமின்றெனின் மானமின்று; மானமின்றெனின் பெருந்தன்மையின்று. எல்லா அறங்களிலும் வியாபித்திருப்பது பெருந்தன்மை. மற்றைய அறங்கள் இதன் பற்றுக்கோடாக நிற்பன.

பெருந்தன்மையுடையோன் தன்னிடத்தில் உலகின்புறத் தானும் இன்புறுவன். சாதாரணமனிதர் சாதாரணவிஷயங்களில் மானம் நோக்கி, அந்த மானத்தின் உவப்பர். இவற்றினைப் பெருந்தன்மையன் இகழ்வன். எனினும் அவன் ஒவ்வொன்றிலும் அளவு நோக்குவன். செல்வம் வந்துற்றகாலை அகங்காரம் அடையாமலும், செல்வம் குன்றி மெலிவுற்றகாலத்தும் பெருமை குறையாமலும் இருப்பன். செல்வம் முதலியவற்றைப் பொருட்படுத்தாது சிறுபொருளாகவே எண்ணுவான். குலத்திற்பிறந்தாரை உலகத்தார் மரியாதை செய்வதால், மானம் காலத்தானுவது. எங்ஙனமாயினும் நல்லவன் யாவராலும் மரியாதையோடு நன்கு பாராட்டப்படுவான். இனிச் செல்வனுகப்பிறந்தவன் மானங் கருதிப் பெருந்தன்மையில் ஆசைப்பட்டு ஒழுகினும் தர்மஞ்செய்யாவிடின், அது போலியொழுக்கமாய்முடியும்.

பெருந்தகைமையன் சிறு விக்கினங்களில் அகப்படான்; பெருங்கேடு நிகழும்போது தன் உயிரையும் கவனியான்; கொடை பிறர்க்கு அளிப்பான், தான் ஏற்கான்; தான் ஒரு நன்மை ஏற்றுல் அதினும் பெருநன்மை பிரதியாகச்செய்வான். உலகில் மானங்கருதுபவர் தாம் கொடுத்தவற்றை நினைப்பானறித், தாம் ஏற்றவற்றை நினைப்பூட்டி

ஞலும் நினையார். பெருந்தன்மையர் அப்படியல்லர். மேலும் பெருந் தன்மைபூண்டோர் தம்மோடு ஒத்தகுலத்தவருடன் சமத்துவமாயும் தம்மிற் குறைந்தோருடன் அன்பாயும் ஒழுகுவர். தாழ்ந்தோனிடத்தி னும் தான் பெரியவனெனக் காட்டுவது சிறுமை. ஒருவரும் ஒரு மூட வனைப் புடைத்துத் தமதுதைரியத்தைத் காட்டார். அருஞ்செயலி லொழிய எல்லாவற்றிலும் பெரியோர் நுழையார். பெருந்தன்மையிற் சிறந்தோன் பகையும் அன்பும் வெளியாகக் காட்டுவன்; வாய்மையுடை யோனுகவும் இருப்பன்; ஒன்றைப் பார்த்து ஆச்சரியப்படான்; பிறர் தனக்குச் செய்த குற்றங்களையெல்லாம் மறந்திடுவான். அவன் தன் பொருட்டாயினும் பிறர்பொருட்டாயினும் பயனில சொல்லான். அவன் புகழ்விரும்புவது மில்லை; புறங்கூறுவதுமில்லை, தனக்கு யாதாயினும் இடர்நிகழ்ந்துழியும் கூக்குரலிடான். அழகிய படங்களால் தன இல் லத்தை நிரப்பி இன்புறுவன். மெதுவாகநடந்து, ஆழ்ந்தகுரலில் ஆறுதலாய்ப் பேசுவான். ஆசையின்மையால் அவசரப்படான். இதுவே பெருந்தன்மையின் சொரூபம்.

மானத்தில் அதிக ஆசை தருக்கெனப்படும். மானத்தில் ஆசை குறைதல் சிறுமை. இவ் விரு அந்தங்களும் தீயொழுக்கங்கள் அல்ல. இவற்றால் தீங்கு விளையாது. சிறியோர் தமது தகுதியின்மையை நினைந்து, மானத்தை ஏற்க நாணிநிற்பர். வீணரோ தமது ஆற்றலை அறியாது தற்புகழ்ச்சியிற் காலத்தைக் கழிப்பர்.

### 4-ம் அதிகாரம். போாசை.

இனி வள்ளற்றன்மைக்கு ஈகை இனமாகியவாறு, பெருந்தன்மைக் குப் போாசை இனமாகும். பணம் ஏற்பதிலும் கொடுப்பதிலும் மிகுவதுஞ் குறைவதும் போல, மானத்திலும் மனிதன் ஒருபாற் கோடுத லுண்டு. மானத்தில் அதிக ஆசையுடையாரை உலகத்தார் இகழ்வர். ஆசைக்கும் ஆசையின்மைக்கும் சமன் இல்லாமையால், ஒன்றற்கொன்று முரணுகும். இவ்வாறிருப்பினும் போாசையை நன்மையென ஒருதலைப்படேம். சிலர் போாசை நல்லகுணமென்றும் சிலர் தீயகுணமென்றும் மொழிவர். இச்செயல்கள் நிகழ்ந்துழி நிகழ்ந்துழி ஆராய்ந்து சிறப்புநோக்கி நன்மைதீமையென நிச்சயிப்பதே முறை.

## 5-ம் அதிகாரம். சாந்தம்.

சாந்தம் என்பது வெகுளியின்மை. இதன் அந்தங்களுக்குப் பதமின்று. சாந்தத்தின் எதிர்மறையிலக்கணம்: கோபிக்கவேண்டிய இடத்திற் கோபிப்பது சாந்தம். சாந்தகுணத்தவர் மெய்ப்பாட்டின்வழி ஒழுகார்— பிழைக்கெதிராய்ப் பிழைசெய்யாது மன்னிப்பர். சாந்தத்தின் குறைவாகிய சினமின்மை ஒரு குற்றமாக இகழப்படும். கோபிக்கவேண்டிய இடத்திற் கோபியாதவன் உரோசமில்லாதவன். அவன் அடிமைக்குணமுடையவன். அவன் தன்சிநேகிதரையும் பிறர் அவமதிக்கும்போதும் கோபியாதிருப்பன். இது நிற்க. சிலர் அளவு கடந்து திடீரெனக் கோபிப்பது கண்டுளோம். இத்தகையோர் கோபம் சீக்கிரம் கெடுமாயின் நல்லது. அவர் மெய்ப்பாடு காரணமாகக் கோபிப்பதால் கோபத்தை வைத்துச்சாதியார். எந்நேரத்திலும் எவருடனும் அளவுகடந்துசினப்பது கடுஞ்சினம். பதிலுக்குப்பதில் வாங்குபவனைத் திருப்திசெய்வது கடினம். இத்தன்மையர் தமது குணத்தால் தாமே துன்பப்படுவர்.

## 6-ம் அதிகாரம். இனியவைகூறல் என்னும் உவப்பாந்தன்மை.

சனசமூகவாழ்க்கையிற் சிலர் மக்களுடன் கலந்து பேசும்போது பிறர் உவக்கத்தக்கனவற்றை மொழிந்து துன்பம் விளைக்கக்கூடியவற்றைத் தவிர்ப்பர். ஏனைய சிலர் குற்றங்கூறும் நோக்கத்துடன் இருப்பர். இவ் விருபழக்கமும் கண்டிக்கப்படும். உவக்கவேண்டியதை உவந்தும் வெறுக்கவேண்டியதை வெறுத்தும் இருப்பதே முறை. உவப்பு ஒருவகை நட்பு. நட்டாருடனும் அன்னியருடனும் இவ்வொரே மாதிரியாய்ச் சிலர் அன்போடுகலத்தலால், இதை அன்பிலாநட்பென்பர். நன்மக்கள் பிறரை உவப்பிக்கும் நன்னோக்கமுடையாராயினும் தமது சம்பாஷணையிலும் செயல்களிலும் மேன்மைகுன்றாது ஒழுகுவர். எதிர்காலத்த பெரிய இன்பம் கருதி நிகழ்காலத்திற் சிறு இன்பத்தைத் தெரியவேண்டுமாகில் உவப்புடன் தெரிவர். ஒருசாரார் தன்னயங்கருதிப் பிறரை உவப்பித்தலும் ஒருசாரார் தன்னயங் கருதாது இனியவைகூறுதலும் வழக்கம். இனியவைகூறுதலில் அளவு கடவாதுநிற்பதற்குப் பதம் இன்று.

## 7-ம் அதிகாரம், வாய்மை.

இனி வீம்பு நிந்தை ஆகிய இரண்டு அந்தங்களுக்கும் சமன் வாய்மையெனக்கொள்வோம். உண்மைபேசுவதிலும் பொய்பேசுவதிலும் அளவு நோக்குதல் வாய்மை. வீம்பன் தன்னை எவர்முன்னிலையிலும் புகழ்ந்துகூறுவன். தன்னைத் தாழ்த்திக்கூறுபவன் நிந்தையணியை மிகவும் உபயோகித்துச் சம்பாஷிப்பான். உண்மையாகவே இங்ஙனம் நிமித்தமில்லாமற் சம்பாஷிப்பாராயின் இவ் விருவகையினரின் தன்மை வெளிப்படையாகத் தோற்றும். பொய் எப்பொழுதும் கீழ்மை பயக்கும்; உண்மை மேன்மை. நிந்தையாய்ப் பேசுவதிலும் வீம்பு குறைவுடைத்து. ஈண்டுத் தொழில் வியாபாரம் முதலியவற்றில் உண்மைபேசுதல் சுட்டப்படவில்லை. இயற்கையாக எந்தநேரத்திலும் உண்மைபேசுவது குறிக்கப்பட்டது. வீம்பனைத் தீயன் என்பதிலும் பேதை என்பதே சரி. நோக்கங்கருதி வீம்பனுயின் அவன் கீழ்மகன். தன்னை நிந்தித்துப் பேசுதல் ஒரு நற்குணம்போலும். சோக்கிறேற்றீஸ் தன்னை யாண்டும் நிந்தித்துப் பேசுவதே வழக்கம். சிறுநயங்கருதித் தம்மைத் தாழ்த்துவாரை உலகம் இகழும். வாய்மையும் வீம்பும் மாறுகோளானவை,

## 8-ம் அதிகாரம். வாக்குச்சாதுரியம்.

இல்வாழ்க்கையில் நாம் எந்நேரமும் விடாமுயற்சியாய் இருப்பதில்லை. முயற்சியில்லாமல் நெகிழ்ந்திருத்தல் இன்பம். இவ்வாறு பேச்சிலும் நெகிழ்தல் நன்று. தருணமறிந்து, தகுதியறிந்து, கேட்போரை உசாவி, கூறவேண்டியதைக் கூறுதலே முறை. வாக்குச் சாதுரியத்தில் மேன்மை என்னும் அழகு இலதாகில் அது நகைத்தற்கிடமாகிய விகடமாகும். நகையாமல் மௌனமாயிருப்பது விலக்குத்தன்மை. இப்படி நெகிழ்ந்திருக்குந் தருணத்தில் ஒருவனது குணத்தை நன்கு அறியலாம், விகடத்தில் அளவு என்னும் சமன் நோக்குபவர் நன்மக்களிடத்து மொழியத்தக்கவற்றையே மொழிவர். கற்றோரின் விகடம் கல்லாதாரின் விகடத்தினும் பிரகாசிக்கும்.

புராதன நாடகம் புதிய நாடகத்திலும் மிகவும் வேற்றுமைப்படுகிறது. முந்தியது கீழ்மக்களின்குணத்தை எடுத்தோதும் கீழ்மொழியால் ஆயது. கீழ்மொழிபேசும் எளியவர் கேட்போர் தமது விகடத்தை

மெச்சுகிறானென நினைப்பர். அது பேதைமை. கேட்போர் இவற்றிற் பிரியப்படார். பிந்தியதோ நிந்தை சிலேடை முதலியவற்றால் இன்பச் சுவை ததும்புவது. நன்மக்களிடத்து மொழியத்தகுந்த விகடமே நாம் கூறவேண்டும். பரிகாசஞ்செய்யும்போது அளவுகடத்தல் நன்றன்று. விகடன் நகைவிளைப்பனவற்றை மொழிய எத்தனிப்பன். விலங்குத் தன்மையான் எவ்விகடத்தையும் கண்டிப்பன். எத்தன்மையர்க்கும் உள்ள நெகிழ்ச்சி இன்றியமையாதது.

### 9-ம் அதிகாரம். வெட்கம்.

வெட்கம் ஒரு அறமன்று, அது பயிற்சியாற் செய்யப்படுவதன்று. இழிவுக் கஞ்சுவதே வெட்கமாய்த்தோற்றுவது. இளமைப்பருவத்தில் மெய்ப்பாடே மனிதனைத் தூண்டித் தொழிற்படுவதால், அப்பருவத்தில் வெட்கம் நற்செயலுக்கு ஒருவாறு காரணமாகின்றது. இளைஞரது வெட்கம் புகழப்படும். வயோதிகர் வெட்கப்படத்தக்கவற்றைச் செய்யக் கூடாது. இழிவானசெயலைச் செய்வதே வெட்கத்தை உண்டாக்குவதாகலான், சமனறிந்து ஒழுகுபவரிடம் வெட்கம் தோற்றாது. வெட்கப்படுவதனால் ஒருவன் தன்னை நல்லவன் என நினைத்தல் தவறு. ஏனெனில் ஒருவன் வெட்கப்படுஞ்செயலே செய்யக்கூடாது. நல்லவனால் நிச்சயிக்கப்பட்டசெயலில் வெட்கம் தோற்றாது. தீயசெயலைச் செய்தபின் வெட்கப்படாதிருத்தலினும் வெட்கப்படுதல் நன்று.

---

## ஐந்தாம் பாகம். நீதி.

### 1-ம் அதிகாரம். நீதியும் அநீதியும்.

*நீதியும் அநீதியும் எவ்வகைச்செயலுடன் தொடர்புடையவென்றும் நீதி எவ்வாறு சமனாவதென்றும் ஆராய்வாம். நீதி நீதிச்செயல்செய்யும் பழக்கத்தானாவது. இதை ஒரு பொதுக்குறிப்பாகவைப்போம். சாஸ்திரம்வேறு, சாஸ்திரத்தால், ஆராயப்படும் சத்தி வேறு. சத்திக்கும் பயிற்சிப்பட்டசத்திக்கும் வேற்றுமை பெரிதாகலின், நீதியும் அநீதியும் மாறுகோளென இலகுவாய்க் காட்டலாம், என்னை? பயிற்சி தனக்கு விரோதமானசெயலைச் செய்யாது. தேகசுகம் சுகவீனத்தை ஒருபோதுஞ்*

தோற்றுவியாது. விரோதமானவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. எடுத்துக்காட்டு: நன்மையறிந்தவன் தீமையறிந்தவனுவன். தசை இறுகியிருப்பது தேகசுகத்தைக் குறிக்குமாயின், தசை நொய்ம்மையாக இருப்பது சுகவீனத்தைக் குறிக்கும். நீதி பலவாறுயின் அநீதி பலவாருகும், நீதிச்செயல்கள் பலவகையாயினும் அவை இனம் பற்றி அடங்கும்.

இங்கே அநீதியின்வகை குறிக்கப்படும். வேந்தரது ஆணையையும் நூல்களில் விதித்தவற்றையும் மீறிநடப்பது அநீதி. ஒருவனுக்குரிய பங்கினும் கூட எற்பது அநீதி. விதித்தவாறு ஒழுகுதலும் பங்கினும் மிகக் கவராதிருத்தலும் நீதியாகும். புறப்பொருள் நன்மைகளில் மிகுந்தும் குறைந்தும் கவருதல் அநீதி. பிரமாணமென்பது அரசன்ஆணை. இவை பொதுசன நயம்பற்றி ஆக்கப்படும். நீதி என்னும் பதத்திற்குக் குணவிரியை விரித்து நீதியென்பது இன்பம் விளக்கத்தக்கது என்போம். வீரம், அளவு, மென்மை முதலியன நீதியாகும். வீரமின்மையின் நாட்டை யிழந்து அடிமைகளாவோம். இங்ஙனம் நீதியென்பது ஒரு முழுமுதல் அறம். அயலாரோடு நீதியாய் ஒழுகுவது மிகவுஞ் சிறந்த ஓர் அறம். ஆதலினன்றே "உத்தியோகம் குணத்தைக் காட்டும்" என்னும் பையாஸ் எனபவரின் முதுமொழி போற்றப்படும்.

## 2-ம் அதிகாரம். நீதிச்செயல்.

நீதி ஒரு நல்லொழுக்கமாயின் சிறப்புச்செயல்களில் நோக்கியறியப்படும் அச்சத்தால் ஒருவன் தன் ஆயுதங்களை எறிந்துவிட்டு ஓடுகிறுன். இச்செயல் கூடாததாயினும் தீயொழுக்கம் அன்றென்பதை அறிக. விருத்தன் ஒருவன் பொருள்நோக்கிப் பிறர்மனைவிழைதலும் வாலிபன் ஒருவன் காமத்தில் அமுழ்ந்திப் பொருட்செலவுசெய்து பிறனில் விழைதலும் இருவேறு அநீதிச்செயல்கள், முந்திய அநீதியிலும் பிந்தியது பெரும் அநீதியாய் எண்ணப்படாது. அநீதி என்பது அகிதஞ்செய்தலும் அரசரது ஆணையைக் கடத்தலும் மனச்சாட்சிக்கு விரோதமாயின செய்தலும் எனப்படும். ஆனல் அரசரது ஆணையும் மனச்சாட்சியினது ஆணையும் முரணக்கூடும். இவற்றைச் சிறப்புச்செயல்களில் ஆராய்ந்து ஒன்றைத் தெரிவதே முறை. இது நிற்க, பொருளைப் பங்கிட்டுக்கொடுப்பதிலும் நீதியாயிருப்போம். இது உத்தியோகத்தாற்

செய்யப்படுவதும், ஒரு குடிமகன் ஒரு பிரசையாகச்செய்வதுமென இருவகைத்து. காணி வாங்குவது விற்பது முதலியவற்றில் மனம் பொருந்தி நீதியாயிருப்போம். கொலை களவு புறங்கூறுதல் பிறனில் விழைதல் முதலியன நிச்சயிக்கப்படாத செயல்கள். அவை பெரும்பாலும் இருவாது மனமும் பொருந்தாது செய்யப்படுவன.

### 3-ம் அதிகாரம். நீதியின் தாரதம்மியம்.

பங்கிடுதலில் மிகுதலும் குறைதலும் உண்டாயின் அளவு மூண்டு. ஒருபங்கு சமனானல் இருதொகை சமனாயிருக்கும். தகுதிநோக்கிப் பங்குபிரிக்கும்போது நாலுபதம் வேண்டப்படும். அட்சரகணிதத்தின் முறை நோக்குக.

$\frac{\text{க}}{\text{ச}} = \frac{\text{ச}}{\text{ஞ}}$ இப்பங்குபெறும் இருவரும் ஒத்த பங்குடையராக வேண்டும். சகரம் ஒரு தொகைச்சமனாகையால் ககரத்திற்கும் ஞகாரத்திற்கும் சமன்.

இனி ஏற்றத்தாழ்ச்சியுள்ள சமனைக் காண்க. $\frac{\text{ப}}{\text{ம}} = \frac{\text{த}}{\text{ந}}$. இது உண்மையானல் $\frac{\text{ப}}{\text{த}} = \frac{\text{ம}}{\text{ந}}$ என்பனவும் உண்மை. மேலும், $\frac{\text{ப} + \text{த}}{\text{ம} + \text{ந}} = \frac{\text{ப}}{\text{ம}} = \frac{\text{த}}{\text{ந}}$ ஆகியதும் உண்மை. சமன் நோக்கிப் பகாத்தைத் தகாத்துடன் சேர்த்தால் மகாத்தை நகாத்துடன் சேர்க்க வேண்டும். இப்பதங்களுக்கு எவ்வெண்ணைப் பதிலாக வைத்தாலும் சமனாதல் அறிக.

### 4-ம் அதிகாரம். நீதியின் தாரதம்மியம்.

குறைவேண்டினார்க்குத் திருப்திசெய்யும் நீதியைக் குறித்தோம். இனி முறைவேண்டினார்க்குத் திருப்திசெய்யும் முறைமை விளக்குவாம். இருவரின் தகுதிநோக்காமல் இருவரையும் சமனாக நினைத்து நீதிமன்றில் நீதி செலுத்தப்படும். முறைவேண்டிடுவோர் இது எனக்குரித்து, ஆகையால் கொடு என்பர். நல்லவனாயினும் தீயவனாயினும் களவிற்குத் தண்டனை ஒன்றுதான். இவற்றின் தாரதம்மியம் பார்த்துத் தீர்ப்பின் நடுவிலே சமயோசன் வேண்டப்படும், குறைவேண்டினார் தமது தேவையைக் கூறி இரப்பர்.

மூன்று சமன் கோடுகள்.




க ம என்னும் துண்டை ப பா என்னும் துண்டோடுகூட்டினுல் ம ப பா என்னும் கோடு ம கா என்னும் கோட்டிலும் ம ம என்னும் துண்டால் அதிகரிக்கும். நயமுமில்லாமல் நட்டமுமில்லாமல் ச சா போல் முதலை வைத்திருப்பது நீதி. கணிதத்திற்போலக் கலைஞானப் பயிற்சியிலும் தகுதிநோக்கிக் கூலிகொடுக்கப்படும்.

### 5-ம் அதிகாரம். பதிலுக்குப்பதில் செய்தல் நீதியோ?

பிதாக்கோரஸ் என்பவரும் அவர் சந்தானமும் செயலுக்குப் பதில்செய்வதே நீதியென்பர். இவர்கள் கீழுலகத்து நீதிபதியாகிய றடமான்தஸ் என்பவரின் சட்டமாகிய "நீ செய்த வினையின்பயனை நீ அனுபவிக்கிறது நீதியே" என்னும் உரையைத் தமக்கிசைந்தவாறு வியாக்கியானஞ் செய்கிறார்கள். சனசமூகத்தில் தகுதிநோக்கியே நீதி செலுத்தப்படும். என்னை? சிற்பன் இருநாள்வேலை ஒரு செம்மானுக்குச் செய்தானுக, செம்மான் சிற்பனுக்குத் தானும் இருநாள்வேலை செய்தாற்போதும் என்பது தவறு. இவை வெவ்வேறுதொழில்களாகையால் பொது அளவை வேண்டப்படும். இதற்காகவே நாணயம் உண்டாக்கப்பட்டது. செம்மான் ஒருவன் பத்துக்காசு வைத்திருக்கிறேன் என்பதென்ன? அவ்வளவு முயற்சி செய்திருக்கிறேன், ஆகையால் அவ்வளவு தகுதியுள்ளேன் என்பதே காசு பண்டமாற்றிற்கு உதவியாயுளது. காசில் விலையும் எக்காலத்தும் ஒன்றன்று. இப்பொது அளவை இல்லையாயின் பண்டமாற்றே இல்லை. பண்டமாற்றுஇல்லையாயின் சனசமூகவாழ்க்கையே யில்லை. சனசமூகவாழ்க்கை இல்லையாயின் நாகரிகமே இல்லை. சிற்பனின் இருநாள்வேலை பத்துக்காசாயின் செம்மானின் ஐந்துநாள்வேலை பத்துக்காசாயிருக்கலாம்.

### 6-ம் அதிகாரம். அநீதிக்குணமும் அநீதிச்செயலும் வேறென்பது.

அநீதியாயிராமலும் அநீதிசெய்யக்கூடும். பிறனில் சிறைபவன் நிச்சயித்துத் தீர்மானஞ்செய்து விழைகிறானல்லன். அத்தருணத்தில்

மெய்ப்பாட்டின்வழியொழுகுதலால், பிறனில்விழைதல் நிச்சயிக்கப் பட்ட செயலன்று. நீதிபதி நீதிக்கும் அநீதிக்கும் அளவறிந்து வரை யறுத்துத் தீர்ப்பது தன்னயங்கருதியன்றிப் பிறர்பொருட்டாகலான் நீதிபதிக்கும் ஏற்ற சம்பளம் கொடுக்கப்படும். ஒருவன் தனக்கு அநீதி செய்வதில்லை. பிள்ளை தன்பகுதி ஆதலால் தன பிள்ளைக்கும் அநீதி செய்ய இயலாது. சமத்துவநிலை அடைந்த பிள்ளைகளோடு சிறப்பு முறையாகத் தகப்பன் ஒழுகுவான். ஒருவன் தன் மனைவிக்கு அநீதி செய்யாதிருப்பதுபோலப் பிறருடன் அத்தன்மையாயிருப்பது மக்கள தியல்பன்று. பிறருடனும் நீதியாயிருப்பதே நீதி.

## 7-ம் அதிகாரம். உடன்படிக்கை நீதி.

பிரசைகள் அநுசரிக்கும் நீதிமுறை சில இயற்கையாலும் சில உடன்படிக்கையாலும் ஆயது. இயற்கைநீதி எத்தேசத்திலும் உள்ளது. ஒருவன் அந்நீதிக்கு ஒவ்வாவிடினும் அது நீதியே. மக்களால் உடன் படிக்கையில் விதிக்கப்பட்டமுறை ஒழுகுதலும் நீதி. பலியிடும்போது ஒரு வெள்ளாடேனும் இரு செம்மறியாடேனும் கொல்லப்படவேண்டு மென்பது ஒரு பாரம்பரியக்கொள்கையாயின் செய்வே மல்லவா? இனி நீதி தேசத்திற்குத் தேசம் வித்தியாசப்படுகிறபடியால் நீதியென்பது மக்களால் ஆக்கப்பட்டதென்பர். இயற்கைநீதி யாண்டும் ஒருதன்மைத் தாயிருத்தல்வேண்டும். நெருப்பு இங்கும் பார்சியாவிலும் ஒருதன்மை யாய் எரிவதுபோல நீதி பேதமின்றியிருக்கும். உலகில் எப்பொருளும் மாறுதலடையுந்தன்மையது, ஆகலின் நீதி இயற்கையுந்தான், செயற்கை யுந்தான். உடன்படிக்கையாற் பெறப்பட்ட பிரமாணங்களும் காலத்திற் குக் காலமும் தேசத்திற்குத் தேசமும் மாறுதலடைவதால் நீதியின் தன்மை அறிவது இலகுவன்று. வலக்கை இடக்கையினும் வலிபுடைத் தென்பது இலகு. இது இயற்கையுண்மையாயினும் சிலரது இடக்கை வலக்கையினும் வலிமையுடைத்தாயிருத்தல் கூடும். தானிய அளவை தேசத்திற்குத் தேசம் பேதப்படுவதுபோல உடன்படிக்கைநீதிப் பிரமாணங்களும் பேதப்படுகின்றன. அநீதியும் இயற்கையானபதும் கட்டளைப்பிரமாணத்தானபதும் என இருவகைத்து. உடன்படிக்கை அநீதியின் தன்மையை ஆராய்தல் விரியுமாகலின் விடுத்தாம்

## 8-ம் அதிகாரம். நீதி நிச்சயிக்கப்பட்டசெயல்.

நீதி மனத்தின் ஓர் சத்திப்பயிற்சிபோல்வதால், நிச்சயிக்கப்பட்ட செயல்களிலேமாத்திரம் நீதி நோக்கப்படும். நிச்சயிக்கப்படாதசெயல்களில் தற்செயலாகவே நீதியேனும் அநீதியேனும் செய்யப்படும். உன் கையைப் பிடித்து ஒருவன் உன் தகப்பனை அடித்தால் அது நிச்சயிக்கப்படாதசெயல். அறியாமைகாரணமாகவும் ஏவல்காரணமாகவும் செய்யப்பட்ட செயல்களும் நிச்சயிக்கப்படாதவை. பின்வருந் தண்டனைக்குப் பயந்து கைம்மாற்றாகப்பெற்ற கடனைத் தீர்க்கும்போது மனதில் அதை வௌவவிரும்புதல் நீதியன்று. ஆனால் வௌவாமையினால் கடன்தீர்த்தல் தற்செயலாய் நீதியாயிற்று. ஒருவனது விருப்பத்திற்கு மாறாய்க் கடனைத் தீர்க்கவிடாமல் யாருந் தடுத்தால் அது தற்செயலாய் அநீதிச்செயல். ஆனால் கடன்கொடாமல்விட்டவனிடம் குற்றமில்லை. நிச்சயிக்கப்பட்டசெயல் தெளிந்தநோக்கத்துடன் செய்யப்பட்டதும் தெளிந்தநோக்கமில்லாது செய்யப்பட்டதுமென இருவகைத்து.

அயலான் ஒருவனுக்குத் தீங்குசெய்தல் மூவகைத்து. முதலாவதாக: அறியாமையினால் தீங்குசெய்கிறோம். ஒரு சிறுதீங்கு செய்யும்போது செய்யுங் கருவியின்தன்மை அறியாதிருந்தால் எதிர்பாராத பெருங்கேடு விளையக்கூடும். இது தற்செயல். ஒரு அடியினால் ஒருவன் இறத்தல்போலும். இரண்டாவதாக: முன்னாலோசியாமற் செய்யும் செயல் தீங்கு விளைக்கக்கூடும். மனிதன் இயற்கையான கோபத்திற் செய்வது தவறாயினும் செய்பவன் அநீதிக்குணமுடையவன் அல்லன். மூன்றாவதாக: ஒன்றைத் தெளிவாகத் தெரிந்து இச்செயல் தீச்செயலெனத் தெரிந்தும் செய்வேனெனச் செய்வது தீயொழுக்கம். ஒருவன் அநீதிசெய்து மற்றொருவனைக் கோபிக்கப்பண்ணினால் அக்கோபத்திற்குக் கோபிப்பவன் உத்திரவாதியல்லன். அறியாமையினாற் செய்த நிச்சயிக்கப்படாத செயல்கள் அநீதியாயினும் மன்னிக்கப்படுவன.

## 9-ம் அதிகாரம். பல்வேறு வினாக்கள்.

அநீதிசெய்வதும் அநீதியை ஏற்று அநுபவிப்பதும் எத்தன்மைத்து என்பதைச் செவ்விதாக விளக்கினோமோவென ஐயம் நிகழும். யூரிப்பிடிஸ் என்பவரது நாடகத்தில், "நான் என் தாயைக் கொன்றேன்,

இதே என் குற்றத்தின் வரலாறு", என மொழிந்த வாக்கியத்தில் அநீதி நீதி ஆராய்தல் இலக்குவன்று. விருப்பத்துடன் அநீதியை ஏற்றுத் துன்புறுகிறுனே? அநீதியை ஏற்பது நிச்சயிக்கப்பட்ட செயலோ? எல்லாநோக்கங்களிலும் நீதி அநீதியை நாம் தெரிந்து தெளிந்து ஆராய்ந்து செய்வதில்லை. எமக்கு விருப்பமில்லாமலிருக்கவும் பிறர் நீதிகருதியேனும் பிறநிமித்தமாகவேனும் எமக்கு நன்மைசெய்கிறுர்கள்.

இனி அநீதிசெய்யும்போது எத்தகையார்க்குச் செய்கிறேம், எக்கருவியாற் செய்கிறேம், எவ்விதமாகச்செய்கிறேம் என்பவற்றையெல்லாம் நிச்சயித்துச் செய்வோமாயின ஒருவன் தனக்கு அநீதியை நிச்சயித்துச் செய்யலாம்போலும். உதாரணமாக: அடக்கமில்லாதவன் நிச்சயிக்கப்பட்ட செயலாகவே தனக்குத் தீங்குசெய்கிறுன். அடக்கமில்லாமையால், பிறர் ஒரு தீங்கை நிச்சயித்துச் செய்யும்போது, ஒருவர் ஏற்கக்கூடும். அநீதிச்செயல் செய்யும்போது ஏற்காத இடத்தும் காலத்தும் ஏற்காத கருவியாலும் முறையாலும் செய்கிறேம். இவற்றுடன் "ஒருவர் விருப்பத்திற்கு எதிராகவும்" எனச்சேர்த்துச்சொல்வது முறையென நான் நினைக்கிறேன். நன்மையென ஒன்றை ஒருவன் சிந்தியானுகின அதை ஒருவன் ஏற்கான். கோமாது இதிகாசத்தில் குளோக்கஸ் என்பவன் டையமீட் என்பவனுக்கு வெண்கலத்திற்காகப்பொன் கொடுத்ததுபோல ஒருவன் நீதியேனும் அநீதியேனும் செய்யும்போது பிறரையே அச்செயல் துன்புறுத்துவதும் இன்புறுத்துவதும். பிறரைத் துன்புறுத்தும்செயல் கருத்தாவை இன்புறுத்தினுலும் அநீதியே.

இனித் தகுதிக்குக் குறைய ஏற்பவனே அல்லது கொடுப்பவனே அவ்வநீதிச்செயலைச் செய்கிறுன்? தகுதிக்குக் குறையக்கொடுப்பவன் அநீதிசெய்கிறுன். அறிந்தும் நிச்சயித்தும் ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதில் மிகுந்தும் தான் ஏற்பதில் குறைந்தும் ஒழுகுவானுயின் அவன் தனக்கே அநீதி செய்பவனுகிறுன்.

மேற்கூறியசெயலில் ஏற்போன் மிக ஏற்பதால் குற்றமுடையானெனின், அற்றன்று. அவன் தன்னயக்கருதாது மேன்மை நோக்கி ஏற்றிருக்கக்கூடும். ஒருவன் மிக ஏற்பது குற்றமன்று. இனி எமது அடிமை எமது ஏவலைச்செய்யும்போது அவ்வினை அநீதிச்செயலாயினும், அவன் அநீதிசெய்கிறுனல்லன்.

மேலும் ஒரு நியாயாதிபதி தற்செயலாய்த் தவறுய்த்தீர்த்தபோதிலும் அவன் அநீதிசெய்யவில்லை என்போம். அறிந்தும் தவறுய்த்தீர்ப்பனுயின், அவன் ஏதோ நிமித்தமாகப் பட்சபாதஞ்செய்கிறுன். பெரும்பாலும் அநீதிசெய்தல் இலகுவாகையால் நீதிசெய்தலினும் அநீதிசெய்தல் யாவர்க்கும் இலகுவெனச் சிலர் சிந்திக்கின்றனர். அப்படியன்று. அயலான்மனைவியோடு புணர்வதும் அயலானை அடிப்பதும் ஒருவனுக்கு இயலுமாயினும், அநீதித்தன்மையில் அழுந்தி அப்புவனத்திற் கட்டுப்பட்டு அநீதியைச் செய்வது நன்மக்களுக்கு இலகுவன்று. ஒரு சமயத்தில் தீயசெயலைச்செய்வது இலகு. நினைத்தவாறெல்லாம் யாண்டும் தீயகுணத்தனுய்த் தீச்செயல்செய்வது இலகுவன்று.

நீதிக்கும் அநீதிக்கும் வேறுபாடு அறிவதற்கு ஒருவன் ஞானியாக வேண்டியதில்லை. அறிந்தபின்னரும் நீதியை எவ்வாறு செய்யவேண்டுமென்பதை அறியவேண்டும். தேகசௌக்கியவிதிகளை அறிவதினும் நீதியை அறிவது கஷ்டம். தேன், திராக்ஷாசம், நஞ்சு, கத்தி, சத்திரவைத்தியம், ஆயுதம் முதலியன யாவர்க்குந் தெரியும். ஆனால் தேகாரோக்கியம் அடைவதற்கு இவற்றுள் எதை எவ்வாறு எவர் பிரயோகிக்கவேண்டுமென்பதை அறிவது இலகுவன்று. இவ்வறிவு உண்டாகியவுடன் ஒருவன் வைத்தியனுவான். நீதியாய் ஒழுகுபவன் அநீதிசெய்வதும் வீரன் தன் ஆயுதத்தை வீசிவிட்டுப் புறங்காட்டி ஓடுவதும் இலகுவான செயல்களாயினும், அநீதித்தன்மையாகவும் கோழைத்தன்மையாகவும் கருதப்படும். இக்கூடாவொழுக்கமாகிய புவனத்திலிருந்து அநீதிசெய்வது உண்மையாய் நீதிமயமாயிருக்கும் சான்றோர்க்கு முடியாதசெயலாம். இம்மையில் நீதியில் மிகுதலும் குறைதலும் உண்டு, தேவர்கள் எத்தன்மையரென ஒருவரும் அறியார். தீயோர்க்கு எதுவும் தீயதே. மக்கட்கு நீதி வரையறையுடைத்தாதலால், நீதி இம்மையுறும்,

## 10-ம் அதிகாரம், ஒப்புரவு.

ஒப்புரவு என்ன என்றும் ஒப்புரவுள்ளசெயல் யாதென்றும் ஒப்புரவும் நீதியும் எவ்வகைத் தொடர்புடையன என்றும் ஆராய்வாம். ஆலோசித்துப்பார்த்தால் அவை ஒன்றல்லவாயினும், ஒரே ஒரு இனத்தைச் சேர்ந்தவை. ஒப்புரவையும் நன்மையையும் ஒருபொருட்கிளவி

போலப் பிரயோகிப்போம். ஒப்புரவு நீதியின் வேறாயின் அதை நாம் எப்படிப் புகழ்வது. நீதியும் நல்லது, ஒப்பரவும் நல்லதாயின் இரண்டும் ஒன்றாயிருத்தல்வேண்டும். ஒப்புரவும் நீதியும் ஓரினத்தைச் சேர்ந்தவையாயினும், ஒப்புரவு நீதியினும் சிறந்தது. நீதியென்பது கட்டளைப் பிரமாணங்களை மீறாது ஒழுகுவது; ஒப்புரவு என்பது காலம் கருவி இடம் வழி வகை நோக்கி நீதியாயிருப்பதாகையால், அது ஒழுக்க நீதி. சான்றோர் மனச்சாட்சியினது நீதியே ஒப்புரவு. அரசநீதி பொதுப் பிரமாணங்களாற் செலுத்தப்படும். அரசநீதி தவறாயின் பிரமாணம் விதித்தவரின் குற்றமாயேனும் அல்லது பிரமாணசாஸ்திரத்தின் குற்றமாயேனும் இருக்கும். எல்லாச்செயல்களுக்கும் நீதிப்பிரமாணம் விதிப்பது இயலாதாகையால், சிறப்புநோக்கி நீதி ஆராயப்படும். ஆதலின், ஒப்புரவை ஆராய்வார் அரசநீதியை ஆராய்ந்து மனத்தினது தன்மையையும் ஆராயவேண்டும்.

### 11-ம் அதிகாரம். அநீதி.

ஒருவன் தனக்கு அநீதியாயிருக்கலாமோ என்பதற்கு மேற்கூறிய வற்றால் விடையளிக்கப்பட்டது. தற்கொலைபுரிபவன் தேசத்துக்குத் துரோகி ஆனதுபற்றியே தற்கொலைபுரிய எத்தனிப்போரை அரசாங்கத்தார் காவற்படுத்தி அவரது சுதந்தரத்தையும் குறைக்கின்றனர். அநீதி செய்பவன் தானே தனக்கு அநீதி செய்கிறான். ஒருவன் தன் மனைவியோடு விபசாரஞ் செய்கிறானென நாம் கேட்டிலம். தனது வீட்டைக் கொள்ளைகொள்வது இயற்கையன்று. தனது பொருளை ஒருவன் தானே செலவுசெய்யச் சுதந்தரமுள்ளவனாயிருக்கும்போது அதை அவன் ஏன் வௌவுவான்? எசமானுக்கும் அடிமைக்கும் உள்ள தொடர்பும் கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள தொடர்பும் பகுத்தறிவுக்கும் பகுத்தறிவில்லாப் பகுதிக்கும் உள்ள தொடர்பு. ஆகையால் ஒருவன் தனக்கே அநீதி செய்யலாம். பகுத்தறிவு அரசனுக்கும் மெய்ப்பாடு பிரசைக்கும் ஒப்பிடப்படும்.

நீதியின் வரலாறு முற்றிற்று.

[தொடரும்.]

த. இராமநாதபிள்ளை, B.A.

---

௳

# நியமச்சூத்திரம்.

—⋑⋑⋑⋐⋐⋐⋐—

செந்தமிழ்த்தொகுதி 30, பகுதி 4-ல் (௱௫-ம் பக்கத்தில்) ஸ்ரீமத். P. S. சுப்பிரமணிய சாஸ்திரியார் அவர்கள் "'முதலெனப் படுவ தாயிரு வகைத்தே' என்ற சூத்திரத்தைப்பற்றி யாராய்வல்" எனப் புகுந்து, அச்சூத்திரம் அச்சுப்பிரதிகளிலுள்ளவாறே, தனிச் சூத்திரமாயிருப்பின், கூறியதுகூறலென்னும் குற்றம் தொல்காப்பியத் துண்டாகும் என்றும், அது, 'தெய்வ முணாவே மாமரம் புட்பறை' என்ற சூத்திரத்தின் முதலடியாக விருப்பின் அக்குற்றம் வாராமையேயன்றித் தொல்காப்பியனார்கருத்தொடுபொருந்தும் பொருட்பேறும் சித்திக்கும் என்றும், அச்சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையிலுள்ள, "(இது, கூறிற்றென்றல் என்னும் உத்திவகை இதன் பயன்:—முதல் இரண்டுவகை என்றவாறும்) தமக்கென நிலனும் பொழுதும் இல்லாத கைக்கிளையும் பெருந்திணையும், நிலனில்லாத பாலையும் பிறமுதலோடு மயங்கிற்றேனும் அவை மயங்கிய நிலனும் பொழுதும் அவ்வத்திணைக்கு முதலெனப்படும்" என்ற செய்திகளெல்லாம், அகத்திணையியலின் முதல் மூன்று சூத்திரங்களாலும் பெறப்படுகின்றன என்றும், இவை பெறப்படுதலின், 'முதலெனப் படுவ தாயிரு வகைத்தே' என்பது தனிச் சூத்திரமாயின் கூறியது கூறலென்னும் குற்றத்தின்பாலே படும் என்றும், "எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் இவற்றுள் ஒருகால் விதித்ததனை மற்றொருகால் அவர் (தொல்காப்பியர்) விதிக்காமை" யாகிய சிறந்த காரணமே, அச்சூத்திரத்தை அவர் தனிச்சூத்திரமாக வைத்திரார் என்பதைத் தெளிவுறுத்தும் என்றும், அச்சூத்திரத்தைத் "தெய்வ முணாவே" என்பதன் முதலடியாகக்கொண்டு, அவ்வடிக்கு, "முதலெனப்படுவதாகிய அவ்விருவகைக்கண் என்ற பொருள் கொள்க" என்றும் எழுதியிருக்கிறார்.

"முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்ற சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியர் உரையிலே கூறியவை, அகத்திணையியலின் முதன் மூன்று சூத்திரங்களாலும் பெறப்படுமாயின், அத் தனிச்சூத்திரம்

வேண்டற்பாலதன்று; சாஸ்திரியார் கூறுகிறபடி அது கூறியது கூறலென்னும் குற்றம் சம்பவிக்கச் செய்தலின். மற்றுப் பெறப்படா வாயின் அது வேண்டற்பாலதே; நச்சினார்க்கினியர் கூறியன பெறுதற்கு. எனவே அகத்திணையியலின் முதன் மூன்றுசூத்திரங்களாலும் பெறப் படுவன யாவையெனக்கண்டபின்னரே, "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்ற சூத்திரம் ஆராய்ச்சிக் குரியதாகும்; ஆகலின் அவற் றாற் பெறப்படுவனவற்றைக் காண்போம்.

ஆசிரியர் தொல்காப்பியனார், அகத்திணையியலின் முதற்சூத்திர மாகிய "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்" என்ற சூத்திரத் தாலே, அகத்திணை எழு எனக் கூறினார். முதலாவதாகிய கைக்கிளை யும், இறுவாயாகிய பெருந்திணையும் எடுத்தோதி, "முற்படக் கிளந்த எழுதிணை யென்ப" என்று தொகை கொடுத்தமையின், நடுவ ணைந்திணை யுண்டென்பது பெறப்படுதலானும், அதிகாரம் அகத்திணையாதலானும் அகத்திணை இத்துணைய வெனவே கூறினார் ஆசிரியர் என்க. இன்னும், "முற்படக் கிளந்த எழுதிணை" என்றமையானே பிற்படக்கிளந்த எழுதிணையு முண்டென ஈண்டே பெறவைத்தவாறும் காண்க.

இரண்டாவதுசூத்திரமாகிய "அவற்றுள் நடுவணைந்திணை நடுவண தொழிய" என்பதனாலே, மேற்சூத்திரத்துக் கொள்ளவைத்த நடுவணைந் திணையைப் பிரித்துவாங்கி, அவ்வைந்திணையுள்ளும் நடுவணதாகிய பாலையொழிய ஏனையவற்றிற்குத் தொல்லாசிரியர் நிலம்பகுத்துக் கொண்டமை கூறுமுகத்தானே, பாலைக்கேயன்றி, முற்சூத்திரத்துக் கூறிய கைக்கிளை, பெருந்திணைகட்கும் நிலமின்றென்பது பெறவைத்தார்.

மூன்றுவதுசூத்திரமாகிய, "முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே" என்பதனால் இன்ன இலக்கணத்தது திணையாவது எனக் கூறி னார். ஆசிரியர்கருத்துக் கியையுமாறு நச்சினார்க்கினியார், "இது நடுவ ணைந்திணையைப் பகுக்கின்றது" எனச் சூத்திரநுதலியதுகூறுமிடத் தெழுதினார். அவர் உரையின் ஒட்பம் காண்க. முதற்பொருள்: நிலனும் பொழுதும். அது, "முதலெனப் படுவது நிலம்பொழு திரண் டின் இயல்பென மொழிப" என்ற சூத்திரத்தாலே அறிவிக்கப்பட்டது. கருப்பொருள்: "தெய்வ முணாவே மாமரம் புட்பறை" என்ற சூத்திரத்தா

லறியப்படுவது. உரிப்பொருள்: "புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்" என்ற சூத்திரத்தால் அறியப்படுவன.

பாலைக்கு நிலமின்றேனும், முதற்பொரு ளிரண்டி லொன்றாகிய பொழுதுண்டு. (பெரும்பொழுதும் சிறுபொழுதும்.) தெய்வமொழிந்த கருவுண்டு. (தெய்வமுண்டென்பாரு முளர்.) பிரிதலும் பிரிதல்நிமித்தமு மாகிய உரிப்பொருளு முண்டு. மற்றுக் கைக்கிளை, பெருந்திணைகட்கு முதல் கரு உரி என்ற பொருளில்லை. அவற்றுக்கு ஒருதலைக்காமமும், தேறுதலொழிந்த காமத்துமிகுதிறமுமே முறையே உரியன. ஆகலின் அவைதம்மை அகப்புறமென்றும் சொல்லுப. ஆகவே உரிப்பொரு ளின்மையால் அகத்திணையாதற்குச் சிறவாத கைக்கிளை பெருந்திணைகட் காகிய ஒழுக்கமும், முதற்பொருளாகிய நிலனும் பொழுதும்பற்றி யல்லது நிகழ்தல்கூடாதாகலின், அவற்றை விதித்தற்கு நியமச்சூத்திர மாக, "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்று கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனர். நச்சினர்க்கினியரும், அச்சூத்திரத்துரையிலே கூறி யுள்ளவற்றை நன்கு உளங்கொளல்வேண்டும். அவர் கூறுவன காண்க:- "இது கூறிற்றேன்றல் என்னும் உத்திவகை: இதன்பயன்:— தமக் கென நிலனும் பொழுதும் இல்லாத கைக்கிளையும் பெருந்திணையும், பிறமுதலோடு மயங்கிற்றேனும், அவை மயங்கிய நிலனும் பொழுதும் அவ்வத்திணைக்கு முதலெனப்படும்" என்பது அவருரையாகும்.

எனவே, அகத்திணையியலின் முதல் மூன்று சூத்திரங்களாலும், "தமக்கென நிலனும்பொழுது மில்லாத கைக்கிளையும், பெருந்திணையும் ...............மயங்கிய நிலனும் பொழுதும் அவ்வத்திணைக்கு முதலெனப் படும்" என்று ஆசிரியர் தொல்காப்பியனர் கூறினராதல் பெறப்படாமை யாலே, "இவையெல்லாம் இவ்வியலின் தொடக்கத்துள்ள முதல்மூன்று சூத்திரங்களாற் பெறப்படுகின்றன" எனத் தாமாக ஒருமுடிபுகட்டிக் கொண்ட சாஸ்திரியாரவர்கட்கு ஆராய்ச்சிக்கே இடமின்மை காண்க.

கைக்கிளை, பெருந்திணை என்பவற்றுக்காகிய ஒழுக்கம் நிகழ்தற்கு ஏதாவது ஒரு நிலனும் ஒருபொழுதும் ஆவசியகம். நிலமோ நான்கு. அவையோ முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற திணைகட்குரியன. பொழுதோ பெரும்பொழுது ஆறும் சிறுபொழுது ஆறும். அவையும் நடுவணைந்திணைக்கு, ஏற்றபெற்றி யுரியன. கைக்கிளை பெருந்திணை

கட்கு, முதற்பொரு ளில்லையாகலின், அவற்றதொழுக்கம் முதற்பொருளுடைய ஏதாவது ஒருதிணைக்கண்ணே நிகழ்ந்ததாகக்கொண்டாலன்றி அவை நிகழ்ந்தனவாகக் கூறுமாறில்லை; ஆதலின் அவை முதற்பொருளுடைய திணைக்கண்ணே நிகழும் எனக் கூறவேண்டியதும் இன்றியமையாதாகும். ஆயின், காலமாகிய முதற்பொருளொன்றினையே யுடைய பாலையை விலக்கியுமாகல்வேண்டும். என்னை? அதற்கு நிலமின்றாகவே ஒழுக்கம் நிகழ்தற்கு இடமில்லையாதலி னென்க. எனவே நிலமும் பொழுதுமாகிய முதற்பொருளிரண்டுமுடைய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நாற்றிணையுள் ஒன்றன்கண்ணே கைக்கிளை, பெருந்திணை கட்காகிய ஒழுக்கம் நிகழ்ந்ததாகக் கூறவேண்டும். ஆதலாற்றான், "முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின் இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே" என்ற சூத்திரத்துக்கூறிய முதற்பொருள்தம்மை வற்புறுத்துவாராகி, "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

"ஆயிருவகைத்தே" எனச் சுட்டியும் தேற்றங்கொடுத்தும் ஆசிரியர் கூறினமையாலே, நிலனும் பொழுதுமாகிய இருபொருளையும் தழுவியே யுரைத்தமை கண்டும், நியமச் சூத்திரத்தின் இயல்புணர்ந்தும், நச்சினார்க்கினியர் உரைகூறியவிடத்தே, "இதுகூறிற்றேன்றல் என்னும் உத்திவகை: இதன்பயன்........என்று உரைகூறத்தொடங்கி, கைக்கிளை பெருந்திணைகட்காகிய ஒழுக்கம், நிலமும் பொழுதுமுடைய நாற்றிணைக் கண் யாண்டுநிகழ்ந்ததோ அதனை அவ்வத்திணைமுதலாகக் கொள்க என்ற அளவி லமையாராய்ப் பாலைக்கு நிலமாகிய முதற்பொருளின்மையாலே, அதன்கண் கைக்கிளை பெருந்திணையொழுக்கம் நிகழாது என் றுணர்த்துதற்கு, "நிலனில்லாத பாலையும் பிறமுதலோடு மயங்கிற் றேனும் அவை மயங்கிய நிலனும் பொழுதும் அவ்வத்திணைக்கு முதல் என்பதாம்" என்றும் எழுதினர். அதனாலே பாலையும், நிலமுதற்பொருளுடைய நாற்றிணையுள் முல்லை, குறிஞ்சி என்பவற்றுக்குரிய நிலமுதற்பொருட்சார்புபற்றியே நிகழும் என்பதும் விளக்கினாதல் காண்க.

"உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே" என்ற சூத்திரத்தால் மேலே கூறியன பெறப்படுமாகலின், "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்று பெற்றதன் பெயர்த்துரை வேண்டாவெனின் அற்

றன்று. "உரிப்பொருளல்லன" என்பதனுல் கைக்கிளையும் பெருந்திணையும் நால்வகைநிலத்தும் மயங்கிவரும் என்று கூறியதல்லது அவை எந்நிலத்துவந்தனவாகக் கூறப்படுகின்றனவோ அந்நிலமும் பொழுதுமே அவ்வத்திணைக்கு முதலாமென்பது கூறியதாகாது; ஆகலின், அது நியமித்தற்கு, "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்பது வேண்டுமென்க.

இவற்றுலே, "முதலெனப் ... ... ... வகைத்தே" என்றது நியமச்சூத்திரமாய், கைக்கிளை பெருந்திணைகட்காகிய ஒழுக்கம் நிகழ்கிற இடம் நியமித்தற்கு அவசியமாய் வேண்டப்படுதலின், அது தனிச் சூத்திரமாயிருப்பதே தக்கதாம் என்றுணர்க. இங்ஙனம் நியமியாத காலத்துக் குன்றக்கூறல், மயங்கக்கூறல் என்னும் குற்றங்கள் உண்டாம். ஆகுமாறு, "உரிப்பொருளல்லன" என்ற சூத்திர உரையால் உணரலாகும்.

இனி, நியமச்சூத்திரத்தின் இலக்கணமாவது: முன்னுென்றுற் பெறப்பட்டதனையே பெயர்த்துரைத்து அதனு லொரு பயன்படச் செய்தலாம். அது கூறியது கூறலென்னும் குற்றமாகாது; குணமாகக் கொள்ளப்படுவது. என்னை? அதனு லொருபயன் கொள்ளப்படுதலால் என்க. இதனை, "சிதைவெனப் படுபவை வசையற நாடின்" என்ற மரபியற்சூத்திரத்திலே, "வசையற நாடின் என்றதனுன், இங்ஙனம் குற்றமென்று வரையப்பட்டனவற்றைக் கொண்டுபுகுந்து மற்றுெரு பொருள் கொள்ளின், அவை வசையற்றனவாமென்பது. அவை கூறியது கூறல், மாறுகொளக்கூறல், மிகைபடக்கூறல், பொருளிலமொழிதல், மயங்கக்கூறல் என்னும் ஐந்துமாயின. கூறியதுகூறல் முன்னு மொருகாற் சொல்லியதனைப் பின்னு மொருகாற் சொல்லுதல். அது, "உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே" எனவும், "வந்த வீரேழ் வகையிற் றுகும்" எனவும் இருகாற் சொல்லி, ஒருகாற் பயன்கொண்டவாறு" எனப் பேராசிரியர் எழுதியவாற்றுனும், "படையியங்கரவம்" என்ற சூத்திரத்து, நுதலியது கூறுகையில், "இது முன் ஈரேழாமென்ற துறை இருவகைப்பட்டு இருபத்தேட்டா மென்கின்றது" என நச்சினுர்க்கினியர் நிரைகோடலுக்கும் மீட்டலுக்கும் ஏற்ப விரித்துப் பயன் கொண்டவாற்றுனும் குணமாகக்கொள்ளுத லறிக.

இன்னும், மரபியலிலே, "ஒத்த காட்சி யுத்திவகை விரிப்பின்" என்ற சூத்திரத்து வரும், "கூறிற்றென்றல்" என்னும் உத்திக்குப் பேராசிரியர் எழுதியிருப்பனவற்றையும் ஈண்டுக் காட்டுதும். அவர் எழுதுவன வருமாறு: "முற்கூறியதோர் இலக்கணத்தினை மற்றொரு பொருட்கும்விதிக்கவேண்டியவழி, அவ்விலக்கணத்தினை மீட்டுங்கூறுது மேற்கூறியவாற்றனே கொள்க என்பான் அவை கூறினும் என்று நேகிழ்ந்துபோதல்......... "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என (வும்) வருவன அதற்கு இனமெனப்படும். என்னை? கைக்கிளை பெருந்திணைகட்கும் இவையே முதல் என்றலானும்......"எனக் காண்க.

இவ்வாறாகிய உத்திவகைபற்றிவந்த சூத்திரங்களைப் பிற்காலத்து ஆசிரியர் நியமச்சூத்திரம் எனக் கொண்டனர்.

நியமச்சூத்திரங்களுக்குப் பயன்கூறலே உரையாளர்க்கு நெறிப் பட்டவழக்காயிற்று என்பதை, "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்பதற்கு நச்சினார்க்கினியார் உரையாலும், "கூறிற்றென்றல்" என்னும் உத்திக்குப் பேராசிரியர் எழுதியவற்றாலும், சொல்லதிகாரத்து இடையியலிலே யுள்ள "உம்மை யெண்ணின் உருபுதொகல் வரையார்" என்புழி, "பிறிதுபிறி தேற்றலும் உருபுதொக வருதலும்" என்னும் பொதுவிதியான் உம்மையெண்ணின்கண் உருபுதொகல் பெறப்பட்டமை யால், பெற்றதன் பெயர்த்துரை நியமப்பொருட்டாகலான்........... ஏனையெண்ணின்கண் அவை வரையப்படும் என நியமித்தல் இதற் குப் பயனாகக்கோள்க" என்று சேனாவரையர் எழுதியவற்றாலும் அறிக.

இவற்றாலே, "நிலமும் பொழுதுமில்லாத கைக்கிளையும் பெருந்தி ணையும், நிலனில்லாத பாலையும் நிகழ்தற்கு இடம் நியமித்தலே பயனாகக் கூறிற்றென்றல் என்னும் உத்திவகைபற்றியெழுந்தது "முதலெனப் படுவ தாயிரு வகைத்தே" என்ற சூத்திரம் என்ப துணர்க.

"வினையின் றில்லை", "இடைச்சொல் லெல்லாம்" என்ற சூத்திரங் களும் பெற்றதன் பெயர்த்துரைகளே யன்றோ? இவை நிற்க:

சாஸ்திரியாரவர்கள், "தெய்வ முணாவே" என்ற சூத்திரத்தின் முதலடியாக "முதலெனப்படுவது" என்பதைக் கொள்ளவேண்டு மென்கின்றார்கள் அங்ஙனம் கொள்ளுமிடத்து, "வகைத்து" என்னும்

குறிப்புமுற்று வகைக்கண் என்று ஏழாம்வேற்றுமைப்பொருள் தந்து நிற்குமா? தனிச்சூத்திரமாகக்கொள்ளின், "முதலென்று சொல்லப் படுவது நிலமும் காலமுமாகிய அவ்விருவகையை யுடையது" என்று பொருள் எழுதின சாஸ்திரியாரவர்கள், "தெய்வமுணாவே" என்பதன் முதலடியாகக் கொள்ளுங்கால், "முதலெனப்படுவதாகிய அவ்விரண்டு வகைக் கண் என்று பொருள்கொள்க" என்றது எவ்வாறு பொருந்தும்?

பண்டித. ஆ. சிவசுப்பிரமணிய ஐயர்,

மதுரை.

---

ஸ்ரீ:

# மதிப்புரை.

:(o):

கலித்தொகை (நெய்தற்கலி):—இது, காலஞ்சென்ற ஸ்ரீமாந். இ. வை. அநந்தராமையரவர்களுடைய புதிய கலித்தொகைப் பதிப்பின் மூன்றும் பகுதியாகும். இதனுடன் இந்நூல் முடிவெய்துகின்றது. தமிழ்மக்களால் இது பெரிதும் விரும்பி எதிர்பார்க்கப்பட்டது. இதில் நெய்தற்கலியின் மூலமும் நச்சினார்க்கினியருரையும் அடங்கியிருத்தலோடு நூல்முழுமைக்கும் அரும்பதமுதலியவற்றின் அகராதியும் நூலாசிரியர் உரையாசிரியர் வரலாறும் முதலிய ஆராய்ச்சிக்குறிப்புக்கள் சேர்க்கப்பெற்றுள்ளன. இவ் வரிய தமிழ்ப்பணியை நன்குமதித்துச் சென்னைச் சர்வகலாசங்கத்திலும் அண்ணாமலை சர்வகலாசங்கத்திலும் பொருளுதவி புரிந்தனர். ஆயினும், தமிழன்பர் பிறர்க்கும் புத்தகங்கள் வழங்கி, அவர் கைம்மாறாக அளிக்கும் பொருட்பயன் நுகர்தற்குமுன்னரே ஐயரவர்கள் புகழுடம்பு கைக்கொண்ட பெரும் பிரிவு ஆற்றுந்தரத்ததன்று. இம் மூன்றும் பகுதியின் விலை ரூ. 6-4-0 கிடைக்குமிடம்:—வே. ராமநா தையர், 3/6 பஸார்லேன், மயிலாப்பூர், சென்னை.

தமிழ்ப்பேரகராதி:—இது, சென்னைச் சர்வகலாசங்கத்தின் ஆதா வில் வெளியிடப்பெறுவது. இதன் ஐந்தாந்தொகுதியின் முதற்பகுதி இதுபொழுது வெளிவந்துள்ளது. இதில் 'பா' என்பது முதலாக 'பீஷ்மாஷ்டமி' என்ப திறுதியாகவுள்ள சொற்களுக்கு மேற்கோள் காட்டி விளக்கமாகப் பொருளெழுதப்பட்டிருக்கிறது. வழக்கம்போலவே இவ்வேலை செவ்வையாக நடைபெற்று வருவது திருப்தியளிக்கின்றது.

விலை ரூ. 2; கிடைக்குமிடம்:—The Madras Law journal office, Post Box 604, Mylapore, Madras.

கலாவதி:—இது காலஞ்சென்ற, தமிழறிஞர் ஸ்ரீமாந். வி. கோ. சூரியநாராயணசாஸ்திரியார் (B A.) அவர்கள் இயற்றியது; சீரிய செந்தமிழ்நடையுடையது. பழந்தமிழ்நூல் மேற்கோள் பல பயின்று, கற்போர்க்குக் களிபேருவகை விளைப்பது. இப்பொழுது இந்நூல் ஷ சாஸ்திரியாரவர்களின் புதல்வர் வி சூ. சுவாமிநாதன் அவர்களால் புதிய முறையில் அழகாக அச்சிடப்பெற்று விற்பனைக்குத் தயாராயிருக்கிறது. விலை ரூ. 2. கிடைக்குமிடம்:—வி. சூ. சுவாமிநாதன், புக்ஸெல்லர் அன் பப்ளிஷர், மேலக்கோபுரத்தெரு, மதுரை.

மானவிஜயம்:— இஃது அங்கம் என்னும் ஒருவகைத் தமிழ் நாடகம். இதுவும் ஸ்ரீமாந் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், (B. A.,) அவர்கள் இயற்றியதேயாகும். இது முழுவதும் இனிமைமிக்க செய்யுள் நடையினமைந்தது. அண்ணாமலை சர்வகலாசங்கத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமாந். ந. பலராமையரவர்கள் இதற்கு இன்றியமையாத குறிப்புரையும் முகவுரையும் வரைந்துள்ளார்கள். இதுவும் ஸ்ரீமாந், வி. சூ. சுவாமிநாதன் அவர்களாலேயே இரண்டாமுறையாகப் பதிக்கப்பெற்றது. அன்னார் தம் தந்தையாரிடத்து நன்றியும் தமிழ்மொழியிடத்து ஆர்வமும் உடைமை பாராட்டற்குரியது. மிகவும் அழகாகப் பைண்டுசெய்யப்பட்ட இப்புத்தகத்தின் விலை ரூ. 1. வேண்டுவோர், 'வி. சூ. சுவாமிநாதன் அவர்களிடம் பெறலாம்.

பரதன் அல்லது சகோதரவேற்றி :—இது, தமிழ்நாட்டு, நாடகஅரங்கிற்குப் புதிய வழிகாட்டி வருமாறு சாவித்ரி, நளன், முதலிய புத்தகங்களை எழுதியுதவிய ஸ்ரீமாந். K. ராமஸ்வாமி ஐயங்காரவர்களால் இயற்றப்பெற்றது; தெளிவான இந்தமிழ்நடையில் இயன்றது; இடையிடையே இன்பம்பயக்கும் ஆன்றோர்செய்யுட்களும் அமைந்து விளங்குவது; உயர்ந்த பல நீதிகளை உள்ளத்திற் புகட்டவல்லது. இதன் கதைப்போக்கு இனிமையும் உருக்கமும் வாய்ந்து, படிப்பவர்களைப் பத்திவெள்ளத்திலாழ்த்து பரவசமாகச்செய்கின்றது. விலை ரூ. 1. வேண்டுவோர், K. இராமஸ்வாமி ஐயங்காரவர்கள், No. 2, ஆறுமுகஞ் செட்டி தெரு, திருவல்லிக்கேணி என்ற விலாசத்திற் பெறலாம்.

---

299 வானவர் மதிக்கு மனுகுலத் துதித்து
மாசிலாக் காந்தியுங் குலனு
மீனமொன் றில்லா மனைவியுந் திருவு
மின்சொலும் புதல்வரு மீறில்
ஞானமுந் தன்பா லுறினுமே திலர்தன்
னுமம்வாழ்த் தினும்புரப் பவற்றுற்
றூனமீ தல்லால் விபுதர்கூண் டிருக்கும்
புவனமோ தானமென் பதுவே. (அ)

**வேறு.**

300 பொன்னும் வெள்ளியுஞ் செம்புமே ததகரும் பொன்னு
மென்னு நான்கினு விநம்பினு டிகல்கரும் கல்லாற்
றுன்னும் வச்சிர மெனத்தகு வெண்கலாற் சுடர்போன்
மன்னு செங்கலா லமைத்தவேழ் மதிள்வளைத் துளதே. (கூ)

301 ஆழி யான்குனி சிலைகதை யான்மழுச் சூலங்
கோழி யானயில் குன்றினைக் குறைத்துளான் குலிசஞ்
சூழி யானையா தியகடாய்த் துன்னலர்த் துடைத்தற்
கூழி யாண்படைத் தமைத்தசூத் திரப்பொறி யுடைத்தே. (க0)

302 உலஞ்செ றித்துள கொள்கலப் பொறி[1]யுடக் குநர்மெய்
சலம்ப டப்பிணி சங்கிலிக் கொள்கலப் பொறிக
ளிலங்க ழுற்பிழம் பியக்குகொள் கலப்பொறி யெதிர்ந்தோர்
கலங்கு கப்பணக் கொள்கலப் பொறிகணக் கிலவே. (கக)

303 பொறித்த கன்மதிட் புறத்தகழ்ச் சிலைமகள் புனலுட்
செறித்த தாம்பிரக் கழுமுளை யினிற்செறித் திடுவான்
பறித்தி டாதிகற் கெதிர்நர் வரும்வழி பலகாற்
குறித்து நோக்குவ போன்றிதழ் [2]விரிப்பன குவளை. (கஉ)

304 விண்ணி னுெந்துகன் மதிளகழ்ப் புறக்கரை விரிவின்
மண்ணி னுட்சிறைப் படுத்திய விருப்புமுள் வளைவாய்
நண்ணி னூடி யழுதது பு நடுக்குற நவைகூர்
கண்ணி வைத்தபோன் மிடைந்துள கடுங்கொடிக் கணமே. ()

---

[பி-ம்.] [1]யுடக் கினர். [2]விரிப்பசெங் குவளை, ச.

வேறு.

305 புறம்பயி லகழ்நின் றொலித்தெழூஉ தாங்கப்
புனல்சுலாங் கன்மதி ளகத்தாய்
நிறம்பசந் திருண்ட பொதும்பர்பொன் மதில்வெண்
ணிலவுலாம் வசந்தமண் டபநோய்
துறந்துளா ருளமு மருடரும் புழுகு
சுனைகண்முன் றினினிடை துளங்கு
திறம்பயில் கொடிக ளுடங்குமேழ் மறுகிற்
செறிந்தமா ளிகைசிறந் துளவால். (கச)

306 காமர்தீ வேழி னெடுநெடுங் கடலேழ்
கடவுளர் கணமுநீப் பிலவா
மேமபூ தலமாங் கதனையே வளைத்த
விரவிதேர்க் காலுள பருதிப்
பாமமால் வரைகள் ளிருளனைத் தினையும்
படுபுறக் கடல்சுலா யதொடுங்
தோமற வளைத்த வண்டபித் தியெனத்
தோற்றமே தருந்தொடர் புடைத்தே. (கரு)

இரண்டுந் தொடர்.

307 சொரிமதக் காடப் பகட்டினஞ் சுமந்த
சுவணமால் வரையென வெள்ளிக்
கிரியெனப் பொதிய மலையென வளைத்த
கெழுதகைப் புரிசைக ளுடனே
புரிகரி யெனுமப் பொருளுரை மறவா
தவர்கடாம் வளைத்தபே ரறமாம்
புரிசையொன் றதன்கண் ணகத்தவாய்ச் சுவணப்
புரிசையா தியவளைத் துளதே. (கசு)

வேறு.

308 தழைபடிந் திருண்ட மென்பூந் தண்ணறுஞ் சோலை சூழ்ந்த
மழைபடிந் துறங்குஞ் செம்பொன் மதில்வளைத் தாவு நீர்வாய்க்
குழைபடிந் தலரியீன்ற குருமணி யினெடுங் குன்றும்
புழைபடு கனைத்தாட் கஞ்சப் போதுகு மணிக டாமே. (கஎ)

309 சூலுளோ் தெழுந்த சங்கந் துறைமுகங் கடந்த பாங்கர்
வாலுக வைப்பி னீங்கி மணிமதிள் வாயில் புக்கு
நூலிட வழாது நீண்ட நோக்கமா மறுகி லேறி
மேல்விரி மதிநி லாவின் மிளிர்மணி சொரிவ மன்னோ. (கஅ)

310 வானுற நிவந்த கொம்பர் மாங்கனி யுதிர வாளை
மீனுகண் டெழுத லோடும் வெறிவாரா லுகள விண்மேற்
பானுமண் டலந்தோய் தென்னம் பழமவை வீழ்ந்து கீண்ட
தேனிறால் வழியப் பூந்தேன் றிசைதொறும் வழியு மாதோ. ()

311 அலைமுயங் குறுநீர்ப் பொய்கை யகத்தரும் பவிழ்ந்த வாச
மிலைமுயங் கிருண்ட சோலை யிணர்விரி வாச மாதர்
முலைமுயங் கிளையர் மார்பின் முழுகுமான் மதவா சத்தின்
றலைமுயங் குதலும் வாசந் தனித்தறி வரிய தொன்றே. (உ0)

வேறு.

312 வாடை போந்து வசந்தன் பெயர்ந்திடா
வாடல் செய்மதிட் பூங்கொடி யந்தகா
நாட லிங்கயற் சேரியென் றுந்நல்லோர்
கூட வம்பினென் [1]றும்புரி கொள்கைத்தே. (உக)

313 எழுந்து விண்ணிடங் கொண்டபொன் னிஞ்சிமேற்
செழுந்து கிற்கொடி வெண்ணிறஞ் செய்கைபார்
தொழுந்த ளக்கத் திருநகர்த் தொல்புகழ்
கொழுந்து விட்டது போன்றொளி கூருமே. (உஉ)

314 பொருவில் வானவர் பொன்னக ருத்தா
குருவுள் ளாரக் குருநகர் கோதிலா
வுருவ நாக ருலகொடு மேகமாஞ்
சொருப மானகர் போன்மெனத் தோன்றுமே. (உ௩)

315 செம்பொன் மேருவுந் திக்கப மெட்டும்வாழ்
கம்ப மால்வரை யும்மயன் காட்சியா
லிம்ப ராயிர கோடிக ளீன்ற போற்
பைம்பொன் மாளிகைப் பத்திக டொக்கவே. (உ௪)

[பி-ம்.] [1]றும்மழை. சா.

## வேறு.

316 தெள்ளி தாயெழு தாதுரை தேர்தரு திறத்தா
லொள்ளி தாந்தம துட்டெளி வுற்றுா னீகை
வள்ளி யோர்முன மறைவெளி வந்தவாழ் வெனவே
வெள்ளி மாடங்கள் குழுமிய மேதக வுடைத்தே. (உரு)

317 நலந்த ழைந்த்தள மறைகடாந் தமதென நனிசா
னிலந்து றந்திடா திவணடைந் துறைதிற நினைவா
னிலங்கு சந்திர சூரியர் வெண்பொன்மா ளிகையை
வலஞ்செய் கின்றனர் செம்பொன்மால் வரையின்வை கலுமே. ()

318 காமர் வெண்பொன்மா ளிகைகளுங் கனகமா ளிகையாஞ்
சேம வெண்பொன்மா ளிகைகளாஞ் செம்பொன்மா ளிகையுந்
தாம மேதழை வெயிலொடு நிலவுதாக் குதலா
லேம மேதகு நன்பக லினுமிர வினுமே. (உஎ)

319 வெண்பொன் மாளிகைச் சூளிகை மேற்படர் விதிசார்
பண்பு டைத்தள வங்கள்ப னிற்றுபன் மலரைத்
தண்ப னிக்கதிர்க் கற்றைக ளாமெனச் சகோர
முண்கு மன்மையிற் கக்குவ நாணமுள் ளுறவே. (உஅ)

## வேறு.

320 பசும்பொன் மேனிலப் பனிமதி பசித்தமா மணித்தாமத்
தசும்பி னேடுயர் தவளமா ளிகையினிற் றவழ்ந்தோடும்
விசும்பு தோய்ந்தமாங் கனியுமிழ் பானமே தருசெம்பொன்
னசும்பு வெள்ளிமால் வரையினிற் றுாைபாய் வதுமானும். ()

## வேறு.

321 நவசந் தார்பொழிற் கற்பக நன்கொடி
துவச வான்கழை யிற்சுற்றி யிம்பர்வாய்த்
திவச மும்படர்ந் தேசெம்பொன் மாடங்கள்
கவச மிட்டது போலக் கவினுமே. (௩0)

322 சேடு கொண்டபொன் மாளிகைச் சென்னிமீ
தாடு பூங்கொடி யாசறச் சுற்றியே
சூடு செய்தெழு மாதவன் சுற்றிவிண்
ணோடு தேரினை யோட்டொழித் திட்டவே. (௩க)

323 விண்டு பூாடபொன் மாடத்து வெண்கொடி
கொண்டல் கீண்டத னீருட் குலாவுவ
மண்டு தீம்புனற் கங்கையுள் வாழ்வுகூர்
கெண்டை யீட்டம் பொருவுங் கிழமைத்தே. (௩௨)

324 முழுநி லைத்தவ முற்றிய விண்ணுளோர்
குழுமு பொற்பதி மண்ணவர் கூடுவான்
விழுமி தாய்மயன் மேதரு மாடமென்
றெழுநி லைப்படி யிட்டன மானுமே. (௩௩)

வேறு.

325 வெயில்செய் மாளிகை மேனிலைப் பல்லியங் கறங்க
வயில்செய் கண்ணிய ராடல்கண் டணிபொழி லாங்காய்க்
குயிலி னம்முழ வாய்மயில் கூத்தரிற் கூத்தைப்
பயிலு [1]மாநகர்க் கமைந்தவீ திகளினிப் பகர்வாம். (௩௪)

326 மடங்கொள் கற்புடை மடந்தையர் மகிழ்நர்பால் வைக்குந்
திடங்கொள் சிந்தைபோற் றிருக்கறு செவ்வியிற் சிறந்தே
படர்ந்த நாற்பொரு டோய்ந்துள பழையகாப் பியத்திற்
றொடர்ந்த சொல்லெனப் பொருளெனத் தொடர்ந்தமா ளிகையே

327 தினமுங் கண்டவர் காமுறு தெள்ளமிர் தனையார்
தனமு மென்னடைத் தன்மையுந் தமதுகண் ணுறீஇய
மனமு மாடவர் மாலிகைக் கேவல்போம் வகைசா
லனமு மேமறு காமறு காயின வவையே. (௩௫)

328 நன்பொன் னூல்வின் ணகச்சதுக் கங்கள்சார் நடுவுட்
பொன்செய் கொல்லர் புனைந்தமன் றந்தொறும் புகுந்தே
யினைசொல் வாண ரிகலற வெஃகுநர்ந் தனரா
யன்பி னூற்பழம் பாட்டிருந் தாய்வர்சங் கதமே. (௩௭)

329 சார்ந்த வேழுறுப் புந்திலங் கைவரு வனவாய்
வார்ந்த மாமழைத் தாரைபோன் மான்மதங் கவுள்வாய்க்
கூர்ந்த குஞ்சரக் குன்றினைப் பிடியொடுங் கூட்டி
யூர்ந்து மைந்தரு லாவரும் பொற்பினை யுடைத்தே. (௩௮)

[பி-ம்.] [1]மாணகர்க். ச.

330 உந்து மாகளிற் றூலடி யுழுதெழு குழிகள்
மைந்த ரூர்ந்ததின் டேருரு ளுழுதுமாய்ந் திடவே
யந்த வாழியி னுழ்ந்துள குழிகளா டவர்தாஞ்
சிந்து பூண்மணித் திரள்களிற் றிடர்படுந் தினமே. (௩௯)

331 வாளி யென்னவும் வாம்பரி வீதிவாய் மறஞ்சா
லாளி யன்னவர் தூண்டலுங் கிளைத்தது ளவற்றின்
வேளின் மிக்கவர் மெய்த்திமிர் மான்மத வேரித்
தூளி மண்டிவின் படர்தலு மறையும்வெஞ் சுடரே. (௪0)

332 மான்ம தத்தினை விரும்பிய மழவர்வாழ் மறுகின்
மான்ம தத்துகு மழைபெனக் கரிக்கவுள் வழியு
மான்ம தத்தினி னணைந்தமான் மதக்குழம் புறுமண்
மான்ம தக்குழம் பெனமண மல்கும்வை கலுமே. (௪௧)

வேறு.

333 வாசி மண்டில மாபெழ மண்டுதூள்
பூசல் வேழப் பொருப்பை மறைத்தலும்
வீசு கின்ற விலாழியிற் போகலாற்
காசின் மேனி வெளிவருங் காட்சித்தே. (௪௨)

334 கூற லாம்படிக் கின்றுயர் கோதைமார்
வீறு லாங்குழன் மென்முகை விண்டதேன்
சேற லாலவ ராங்கவை மெய்திரி
சேற லாதுமண் மெய்திரி சேறரோ. (௪௩)

335 கூற்ற மன்னகட் கோதையர் தாடொழ
ஷோற்ற நூபுர வோதையி னுண்ணுணர்
வாற்றல் யாணர் குழலினும் யாழினுந்
தோற்று வித்திடு மேழிசை தொக்கதே. (௪௪)

336 மனவி காரமொன் றின்றிய மாதவப்
பனவர் வேதப ராயண வோதையுந்
தினவி ழாமலி சீர்கெழு மோதையும்
வினவில் விண்ணையுங் காமர் விளக்குமே. (௪௫)

### வேறு.

337 திருமகள் புரக்கு மகநக ரதன்கட்
சிறப்புடைத் திருவிழா மறுகிற்
பெருமைசான் மழவர் சிவிறிகள் பலவும்
பிடித்துமங் கையர்குழாத் தெய்த
வருமுலைச் சுவட்டின் மறுகும்வெண் டாள
வடத்தொடு மனமறு குதலும்
பொருவிலர் பொருவார் புருவவிற் கருங்கட்
பொருகணைக் கிலக்குநின் றனரே. (சசு)

338 ஆடகத் தசும்பிற் றண்பனி நீர்பெய்
யரிசனக் குங்குமக் குழம்பை
நாடகக் கணிகை தனதுநா யகன்கண்
ணயந்தயற் கணிகைமேற் செலக்கண்
டேடகத் தினளா யண்டையி னுட்கொண்
டுறுதுணைக் கண்களிற் செறிப்பச்
சூடகக் கையிலண் டையைப்பறித் தவனச்
சோர்புகாட் டியகணிற் செறித்தான். (சஎ)

339 அரிசனப் புனலைக் கணிகைமார் பசும்பொ
னண்டையான் மொண்டுகொண் டனாய்ப்
புரிசனத் தொடுமோ டவர்தமை வளைத்துப்
படுகொலை விழிகளாற் கூர்த்த
தெரிசனத் தெதிர்நோக் கினர்மதர் விழியுட்
சிவிறிநீர் பெயலுமஞ் சனக்கண்
தரிசனத் தினர்தாங் கவிழ்தலு மதனைக்
கழீஇயின சிமசலங் கவிழ்த்தே. (சஅ)

340 சிறுதலைக் குழலுட் காஞ்சனிப் புனலைச்
சேமமாக் கியவொரு தெரிவை
யுறுதகைப் பழமை யாடவன் முனஞ்சென்
றுபயுகை களிற்றெழு மவள்போற்

குறுகுபு பொழியக் கோட்படு நயனங்
குன்றனு னுபயதோட் புடைக்கோ
ளறுவையிற் றுடைத்துத் தனதமே னிபினெய்
யாடலுந் துடைத்துடுத் தகன்றாள். (சகூ)

341 தாமமார் பினனோர் பார்ப்பனக் குமரன்
றையலா ளொருத்திபின் காந்து
சேமமாண் கச்சின் கடைப்புண ரறுப்பத்
தெரிகடாக் களிற்றினை யவன்றன்
காமர்சென் னியிற்பட் டினைப்பறித் துபய
கட்படா மெனமறைத் தலினோர்
சோமனே யுடைய ஞநிலை நறுமென்
சுண்ணநீ ராட்டினர் வளைந்தே. (ரு0)

342 அலங்குபூண் முலையாள் குழலையோர் குரிசி
லவிழ்த்திட வவனதாம் பங்கி
வலந்தகா முவிழ்ந்துத் தாழ்குழல் செருகி
வலந்துதாழ் பங்கிநீ ணுதியி
னலங்கொள்கும் குமநீ ராட்டுதார் குட்ட
நான்றதைக் காண்டிமன் னவனீ
புலந்துளார் குடரைப் பிடுங்குநின் யானைப்
புழைக்கைபோன் றமையெனப் புகல்வார், (ருக)

வேறு.

343 கூடு நாளையிற் றழைதரா விருநிதிக் குன்றம்
வீடு நாளையில் வீடும்வெண் மதித்தொழில் விருப்பி
னுடன் மங்கைய ரீட்டமு மலர்தொறு நறவுண்
பாடல் வண்டன்ன மைந்தரீட் டமுமினிப் பகர்வாம். (ருஉ)

344 ஆட லாலசம் பையனாயுந் திறைகொளற் கமைந்தார்
பாட லாலிசை மதங்கியை யுருக்குபான் மையினார்
வீட லாதில்ல வோனை விழுநிதி வாங்கிக்
கூட லான்மணந் தவர்மரு டாகலங் கொடுப்பார். (ருங)

345 கண்ணெ னத்தகுங் கூற்றினாற் கூற்றுயிர் கவர்வார்
விண்ணெ னத்தகும் வியனகர் விலைப்படு தனத்தார்
பண்ணெ னத்தகு மொழியினு லக்ஷணமும் படிப்பார்
பெண்ணெ னத்தரு மவர்நிறை யையுநிலை பிரிப்பார். (ருச)

346 நிதியு ளாரெனி னின்றுலோ பமதிடங் கொண்ட
மதியு ளார்களு மருடர நோக்கிவை கலுந்தம்
பதியுள் ளாகஙன் னலங்கொடுத் துளதெலாம் பறிக்கும்
விதியு ளார்விதி வென்றுளார் மதியைவென் றுள்ளார். (ருரு)

347 துறைய றிந்தவோப் புறுபுணர்ச் சியல்லாத் துணைவர்
நிறைய றிந்ததற் கிசைந்தவர்க் கின்பமுன் னிகழ்ந்த
குறைய றிந்தறி யாரின்மீட் டின்பமே கொளுத்து
முறைய றிந்திரு தலையையுங் குழைவுசெய் முறையார். ()

348 தருவி னுலுயர் புரந்தர னெனத்தனந் தழைந்தார்
பொருவி லாரெனச் செம்பொன்மா ரியிற்கொடைபுரிவா
ருருவி னுலுரு வுடையமன் மதனையே யொப்பார்
செருவி னூற்சிலை விசையனுக் கிணைவருந் திறத்தார். (ருள)

349 திருந்து முக்கனி தேனொடு பாலளா யடிசி
லருந்த லாயிழை யாரொடு மாவியுந் தளிர்ப்பான்
பொருந்த லாயவை யிகழ்ந்துபுத் தேளிர்பொன் னகர்ச்சென்
றிருந்து துற்றுபே ரின்பம்யா தெனவிகழ்ந் திடுவார். (ருஅ)

350 மணியு மந்திர மும்மருந் துந்திரு மழுங்கா
வணிக ளாமென வேண்டுந ருச்சனை முகத்தாற்
பணியு மாதியும் பணிமலர்ப் பாணமோ ரைந்தாற்
பிணிசெய் விற்கரும் பேந்திய பெருந்தகை யுவர்க்கே. (ருகூ)

351 கோல மோர்பகற் காயிர மெனபவே கொண்ட
கால வேல்விழிக் கணிகையர் கண்களு மனமும்
போல வங்கவர் புணர்முலைச் சுவட்டின்மேற் றமதாஞ்
சீல முந்தவு முந்திய நோக்கமே சிறந்தார். (சூ0)

வேறு.

352 இயற்கை நன்னல மிருதிய ரிங்கிதக் கலைதேர்ந்த
செயற்கை நன்னலப் பருதியர் வெருவிதஞ் செறிந்தோங்கும்
கயற்கண் ணாரெனும் பன்மணிக் கடுத்தகாட் சியகாட்டு
மூயர்ச்சி மேவிய வுருப்பளிங் கெனுங்குண னுட்கொண்டார்.

வேறு.

353 மாத ராருடன் மைந்தருங் களியுறு வளமைக்
காத லாற்பயில் காமமா ளிகைத்தலங் கழறி
னாத னுமத னிரதிதன் னொடுந்திர ளயந்த
கோதி லாப்பல கோட்டமா மெனுங்குறி யுடைத்தே. (சுஉ)

வேறு.

354 கடைக்கனல் பனிற்றும் வேலுண் கட்பொது வியர்தந் நுண்ணூ
லுடைக்கலை யவற்றை வாரி யொள்ளிணர்க் குருந்தின் மேலா
யிடைக்கரி னிருவ ராடைக் கிருகையால் வணங்கக் கண்டு
மடைக்கலை யீந்த மாயோ னவதாரம் பொறித்த தோர்சார். ()

355 திங்களங் கவிகை வெற்றித் திருமக னிரதி பொற்பூட்
பொங்கிள முலைக்கண் மார்பம் போழவாய் விடாது புல்லு
மிங்கிதக் கிரீடை தன்னை யிளங்கதி ருதய மென்னத்
தங்குபொற் சுவரி னுட்டந் தழைதரப் பொறித்த தோர்சார். ()

356 மழைமதக் களிறுங் காமர் வளரிளம் பிடியுந் தம்மிற்
குழைமதப் புணர்ச்சி யோர்சார் கொய்யுளைப் புணர்ச்சி யோர்சார்
தழைபொ துள் சிறகர் வண்டார் தாமரைத் தவிசின் விள்ளா
விழைதகு சிறப்பி னன்னம் வீவில்சீர்ப் புணர்ச்சி யோர்சார். ()

357 தளிரறை ததும்பும் பாளைக் கரும்பனை மடற்கூட் டன்றி
லளியமென் பெடையோ டின்புற் றமைபுரீஇ கலவி யோர்சார்
குளிர்மதிக் குடைவேள் காளக் கோகிலக் கலவி யோர்சார்
வளர்பிறை யெயிற்றுப் பேழ்வாய் வாளராக் கலவி யோர்சார். ()

358 கருப்புவிற் சுருப்பு நாணைங் கணைமலர்க் காமர் வாழைக்
குருத்தெனும் பூணி வைத்துக் குளம்பெய்போ னகம்வெர் தெந்தாய்
விருப்பொடு மிசைதி யென்றே விரைமல ரடிதூய் வென்றித்
திருத்தகு மதன பூசை தினந்தினம் புரிவ தோர்சார்? (சுஎ)

வேறு.

359 வீதிவாயி னின்றுகண் ணெறிந்துவெம் முலைப்படாம்
பாதியங் ககற்றிமென் பவழவாய் முறுவலித்
தோதிமெல்ல வேநெகிழ்த் துதறிமீள வும்முடித்
தேதிலார் மனங்கவர்ந் திடங்கொடேகு வார்களும். (சுஅ)

360 புறங்கொடுத்த மைந்தர்பின் றொடர்ந்துபோகி நூபுரங்
கறங்குதூதி னிற்றிரும்பு வித்தெதிர்ந்து கண்களா
மறங்கொள்வே லெறிந்துகா தணிதிருத்தி வாய்மைபோ
லிறந்தநாளை நட்புரைத் திடங்கொடேகு வார்களும். (சுகூ)

361 கூடியூட லிற்றுறந்த கொண்கர்வீதி நேர்படா
வோடிநாணி வாயில்புக் கொருபுற மறைத்தபின்
னுடியே கடைக்கணன்பு நல்கியல்கு றைவரா
வாடைசோர நின்றழைத் தாங்கினேகு வார்களும். (எ0)

வேறு.

362 காமனைப் பழித்த கழிகவின் படைத்த
காந்தரா மெனினுமொன் றிலரே
லூமர்போ லுரையற் றுரைத்திடிற் றிரும்பி
யூர்புகு மெனத்தொழு தகல்வார்
வாமன வடிவிற் கூனுடல் படைத்த
மனுகுலத் தவர்கள்பொன் படைத்தா
ராமெனி லெதிர்கொண் டிறைஞ்சுபு வழுத்தி
யவரொடுங் கலந்தவை கவர்வார். (எக)

363 இருநிதிக் கிழவன் மைந்தனுஞ் சுபல்வ
னெய்தனுங் கண்வலைப் படுத்துத்
திருநகை யெழுப்பி. விரைந்தெதிர் பொழுதிற்
செருக்கவிழ்ந் தொருபுடை யினிற்றூழ்
முருகவிழ் குழலை முடித்திடா முன்ன
மோகமுற் றயர்ந்துசாய்ந் திடலும்
வருமுலைக் களிற்றின் முகபடா நீங்க
வாமபா ணிபில்வளைத் தணைப்ப. (எஉ)

364 வரிவளை கறங்கு வலக்கைபற் றினளாய்
மாழைமா ளிகையினுட் கொடுபோய்ப்
பரிவுட னிருத்திப் பாகும்வெள் ளிலையும்
பளிதமு மருத்திய பின்னர்
விரிகதிர்ப் பசும்பொ னரங்கின்வட் டமைத்து
வெண்பொன்மா யக்கவ திருப்ப
வுரிமையிற் பொருதுந் தோற்பனே லிழப்ப
னேர்பகற் பசும்பொனா றெனவே. (எ௩)

365 மயிலியற் சாயன் மாதரா ளுரைப்ப
மைந்தனுந் தனதுமார் பதனிற்
பயின்மணிக் கலனைக் கடைப்புணர் வதனிற்
பயிலுமு டாணியை யகற்றிக்
குயின்மொழி மடந்தை குடங்கையிற் கொடுப்பக்
குங்குமக் குழம்பரூப் புளகச்
சயிலமீ தணிந்து வனப்பமைத் தனளாய்த்
தனித்திரு வரும்பொரு மளவில். (எச)

366 தோற்றன ளாகித் தொண்டைவா யமிர்தஞ்
சுரந்தளித் தவன்குணந் தனதாய்ப்
போற்றலி னுயிரு முடலுமொன் றெனவே
புணர்ந்தபொய் முயக்கின ளவன்ற
னாற்றல்சால் பொன்னந் துகிலொடுந் தனதா
மாடையைப் பரிவருத் தனைசெய்
தேற்றமே பயிலா வுடனயர்ந் துணர்வு
தேறின ளாய்த்துயி லெழுந்தே. (எரு)

367 நினதுகா தணியெப் புலத்துளான் சமைத்த
நிழன்மணி யணியெனக் கழற்றித்
தனதுதாழ் குழையிற் புனைதலு நினக்கே
தக்கதென் றவற்றையும் புரப்ப

மன துவந் தனளாய் மறித்துமாங் கவன்றன்
மனமரு டாநலங் கொளுத்தி
யுனது பொன் னகர்ப்போய் வருகவென் றிறைஞ்சு
முபாயமா மபாயமே யுடையார். (எசு)

ஐந்துந் தொடர்.

### வேறு.

368 பொங்கிள முலைக்கண் மார்பம் போழவே திலரைத் தோய்ந்த
குங்குமத் தொளிமா யாமுன் கொழுநர்வந் தெதிர நோக்கித்
தங்கைநும் மார்பிற் றீட்டுந் தனக்குறி [1]யழிக்கல் லேமென்
றங்கவர் புலந்து மாத ரணையில்வீழ்ந் தயர்ந்து மாதோ. (எஎ)

369 வள்ளுகி ரதனுட் பெய்த வாலிதாம் பளிதத் தூளாற்
கள்ளவிழ் குவளை மையுண் கண்ணிணை கலுழ்ந்த பொய்ந்நீ
ரொள்ளிடை விடாது கோட்டை யிணையணைத் தழுவு மைந்தர்
பிள்ளைவண் டாற்று மார்பிற் பிணையலீர்த் தொழுகு மன்றே.

இரண்டுந் தொடர்.

370 மழைபிடித் தனைய கூந்தன் மாதரார் மதர்வே லுண்கண்
குழைபிடித் துலாவ மைந்தர் கூடியுட் குழைந்த செய்கை
கழைபிடித் தெழுந்த வென்றிக் கைச்சிலைக் கடவு ளுண்ணூற்
பிழைபிடித் தவன்றன் னெஞ்சம் பின்பிடித் திடும்பெற் றித்தே.

371 மைந்தரு மகளிர் தாமு மையல்கூர் மதன போரிற்
சிந்துமெய் வெயர்வு மாய்ப்பான் சிலதியர் மடற்பெய் தேந்துஞ்
சுந்தர நறுமென் சுண்ணந் துணைமுலை பொதிந்து பூத்த
சந்தனத் துகளில் வீழ்ந்து தலைவர்வேர் புலர்த்துவாரே. (அ0)

372 பொனங்கொடி மகளிர் மைந்த ரருந்தலிற் பொருந்து பூணின்
மனங்களி பயிலப் பஞ்ச வாசமுங் கவுட்கொண் டொண்பூ
வினம்பயி லமளி நீங்கா திரதிபு மதனு மென்னத்
தினந்தெவிட் டாத போகஞ் செவ்வியி னுகர்வர் மன்னோ. (அக)

---

[பி-ம்.] [1]யழிக்கில் லேமென். சா.

373 பொன்றிகழ் கடகம் பாத பொலங்கழல் புடைவைத் திப்போர்
வென்றவர் கொள்வ ரென்றே வெறுக்கையம் பலகை மீதா
நன்றிசே ராங்கி னல்லார் நருமணிக் கருவி பூட்டித்
துன்றுசா ரங்கம் வாதிற் றுணைவரின் முயல்வ ரோர்பால்.

374 குருமணித் தரளப் பந்து குளிர்மதி முகத்தா ரெற்றித்
தெருமா வவிழ்கே சத்திற் சிமிழ்ப்புறு முன்னும் பின்னு
மிருமதி கவ்விக் கொண்ட விராகுவென் றெழில்வா னுச்சி
வருமதி மயிற்கு ழாங்கூர் மலர்ப்பொழின் மறையு மன்னோ.

வேறு.

375 ஏழ ரைச்செம்பொன் மாளிகை யும்பர்வா யிலினெய்தக்
கோழ ரைக்கமு கூசலா டனுங்கொடி யிடையார்தஞ்
சூழி யக்குழ லவிழ்ந்திட நனந்தலை முகந்தோன்றன்
மாழை மால்வரை மழைநடு வண்மிளிர் மதிமானும். (அச)

376 கன்ன லஞ்சிலை மதனுரு வொடுங்கடற் படையோடு
மன்னி லத்துறு தவமுயல் குருநான் மகிழ்தோட
நன்ன லத்தகை மகளிரா டவரென நயந்தோங்குந்
தொன்ன லப்படை குழீஇயபா சறையிஃ தெனத்தோன்றும்.

வேறு.

377 [1]பொற்பு நாணுஞ் சிறந்துள பூரணக்
கற்பின் மங்கையர் காட்சியு மேதிலா
ரிற்ப யின்ற மனைவியர் யாயெனுஞ்
சொற்ப யின்றவர் காட்சியுஞ் சொல்லுவாம். (அசு)

378 காத லாரைத் தொழுதெழுங் காதலா
ராத லாற்றெய் வதந்தொழு மன்பிலார்
கோத லாநிறை கூர்வசிட் டன்குல
மாத ராளு மதித்துரை கற்பினர். (அஎ)

379 முனிவர் வாய்மைக்கு முத்தமிழ் வாணராம்
புனிதர் வாய்மைக்கும் பொன்னுல கத்துவாழ்
வனிதை மாரொடும் வானவ ரீங்கிவர்
தனிமை வாய்மை யுவமை தலைப்பெய்வார். (அஅ)

---

[பி-ம்.] [1]பொற்ப ாணினுஞ். ச.

380 குன்று போல்விருந் தெய்தினுங் கொண்கர்தா
மன்ற ளிப்பகொண் டாகுதி யாளர்போ
லொன்று சிந்தித்த வுள்ளத்தொ டொப்புடைத்
தென்று பல்க வியற்றி யருத்துவார். (அகூ)

381 நன்மை தோய்கள நாண்மங் கலமல்லாற்
றன்மை தோய்ந்த வனப்பின் றலைத்தலைப்
புன்மை செய்தணி யாவும் புனைகலார்
வின்மை மாரன் விடுகணை வென்றுளார். (கூ0)

382 நாண்ம டப்பம் பயிர்ப்பச்ச நான்குமே
பூணை மக்கென வைகிய பொற்பினு
ராண்ம கன்கொள்கை யாதெனி லங்கதா
மாண்ம னத்தின ராய வரத்தினர். (கூக)

383 வானி ரம்பிய திங்களின் மாசிலா
நூனி ரம்பிய கேள்வியர் நோன்கதி
ரானி ரம்பிய வாதபன் சோதிபோற்
றூனி ரம்பிய வாய்மை தழைந்துளார். (கூஉ)

384 வாய்ந்த கல்வியர் காலையின் மன்பக
லேய்ந்த வுண்டியர் மாலையும் யாமமுஞ்
சாந்தம் பூவொ டணிந்தபின் றையலார்த்
தோய்ந்து கண்டுயில் கொண்டெழு தோற்றத்தார். (கூங)

385 இல்ல றத்திருந் தேனைய மூவர்க்கு
மொல்லும் வாய்மையி னெப்புர வுய்த்துளார்
செல்வ மெய்துபு தென்புலத் தார்முதல்
கல்வி கற்றவர்க் கேமுறு காவலார். (கூச)

386 குறியு றூமுதன் மேலன்றிக் கொள்கையோர்
பிறிவி லாரிற்றம் பேதையர்க் கன்புகூ
ரறிவி னார்பிறர் தாரத் தடாதுமுப்
பொறியி னைத்தளை பூட்டிய பொற்பினர். (கூரு)

387 காவை மானுங் கொடையரஃ காநிதிக்
கோவை மானு மிருநிதிக் குன்றத்தார்
பூவை மாரன்றிப் பொற்பினை யேசுவர்ப்
பாவை காணினுங் காமுறும் பான்மையார். (கூசு)

வேறு.

388 பன்னி ரண்டுட னெண்ணிரண் டகவையாம் பருவ
முன்னு வார்முத னுகரிற் போகமே முயல்வார்
பொன்னி னீணகர்ப் போகமும் போகபூ மியில்வாழ்
மன்னர் போகமு மென்னபோ கமதென வாழ்வார். (கூஎ)

389 இம்மை தன்னொடு மறுமைக்கு மீறிலா வின்பந்
தம்மை வந்தெமைக் கொள்கெனத் தடையறத் தகைசா
லும்மை நல்வினை யுடனெதிர் கொளுநெறி யுய்க்குஞ்
செம்மை மக்களைப் பெற்றுள செல்வமே சிறந்தார். (கூஅ)

390 மாட வீதியு லாய்மணர் தவர்மணி மார்பத்
தாடன் மாலையைப் பரத்தையர் மிச்சிலென் றணையா
தூட லான்முலை முகத்தை[1]நோக் குநர்மனத் தூட
னீட லாலுணர்த் துதற்குளத் தொருவழி நினைவார். (கூகூ)

391 தாத ளைந்துவண் டிசையொடுஞ் சாளரப் புழைபுக்
கூது தென்றலி னுண்ணிலை காமமுள் சுடலுங்
காதல் கூர்ந்தது வாயிலாக் கைகலர் தாகங்
கோது கொண்டுனர் விழுந்தம ளியிற்றுயில் கூர்வார். (௪00)

இரண்டுந் தொடர்.

வேறு.

392 வெறுக்கையிற் கலுழ்ந்த கண்ணீர் விரைதரா மேன்மேல் விம்மி
முறுக்குடைந் தரியாக் கஞ்ச முலைக்கணுற் றுறைப்பத் தம்மைப்
பொறுப்பதான் மருங்குற் குற்ற புன்கணுற் றழுத தென்று
மொறுப்பகண் டழுத தென்றும் வியந்துரைத் தூறு கொண்டே.

---

[பி-ம்.] [1]நோக் கினர்.

393 உருக்களா வயில்வே லுண்கண் ணுறைதுடைத் தன்பி னுள்ளந்
திருக்களா யதனைச் செவ்வி செறித்துணர்த் தினராய்ச்சேர்ந்து
முருக்களாவி தழ்த்தேன் றுய்த்து முகிழ்த்தகண்கொடுங்கைநீங்க
வெருக்கொளா விழித்து மீட்டும் விழிப்புனல் பனிற்று வாரே.

இரண்டுந் தொடர்.

## வேறு.

394 முரிந்த விற்புரு வத்தியர் கலவியான் முயங்கச்
சரிந்த விழ்ந்திடு மளகபந் திபிற்றனை யவிழ்ந்தே
சொரிந்த பூமதுச் சுவடுநீஇச் சோலைவாய்த் துணைரைப்
பிரிந்துபோந்துமென்சுரும்புணத்தொடர்ந் துணும்பெடையே.

395 கோள ரத்தினால் வடித்தவே னெடுங்கண்ணார் கொழும்பொற்
றோள ரிங்கிதக் களிப்பினான் முயங்கிய துயிலை
வாள ரக்கெறி மாளிகைப் பளிக்கறை மணிசெய்
சாள ரத்தூறுங் கொண்டணுண் டுளிதுடைத் தனவே. (கOச)

## வேறு.

396 அளிக்குழாங் களுலும்பூ வணைப்புறத் தணங்கனார்
பளிக்கறைத் தமதுமெய் பயந்தபாவை கண்ணுறீஇக்
களித்துமைந்தர் தம்மொடுங் கலத்தல்காண வேதிலா
ரொளித்திருப்ப தென்னநாணி யோதியான் மறைப்பரே, (

397 குழையொளிர் முகத்தியர் கூந்தலுழ்ந்த பூநறாஅ
விழையளிக் கணத்தைமைந்தர் தாமெழுப்ப விண்ணுலா
மழைதவழ்ந்த மாடகூளி கைத்தலத்து நீனிறந்
தழைமணித் தசும்பதென்று சென்றுசஞ்ச ரிக்குமே. (கOசு)

398 மத்தவெங் களிற்றுவெண் மருப்பையீர்ந் தியற்றிய
சித்திரங்கள் பூகதச் சிறந்தகாய் பரீஇயுரீஇப்
பத்தியிற் படர்ந்தமேல் விலைசுகிர்ந்து பாங்கிபோ
னித்திலத் துகட்படுத்த நூறுநீவி நல்குமே, (கOஎ)

399 தாழியங் குவளைவென் டளவமாலை நித்திலக்
காழக விதானமென் கமலமா வசோகுடன்
சூழியுட் கவின்கொள்சோலை சுற்றுமாளி கைத்தல
மாழியா னளித்தவேணி லாளியாவ மானுமே. (க0அ)

400 தீவின்மேய தத்தைநக சிகண்டியோதி மம்மெனு
மூவினத்த பிள்ளையே முதன்மையாய மொழியொடு
நீவிர்சாயன் மென்னடை நிகர்ப்பிரென்று சோலையுட்
கூவுபுட் கணத்தின்வாழ கூயிருக்கு நாளுமே. (க0கூ)

**வேறு.**

401 துளக்க மாளிகை மேனிலத் திருந்துபொற் றொடியார்
விளக்க மெய்துபூம் பொழிற்கனி நுகரென விடுப்பக்
கொளத்த குக்குடக் கனிச்சுளை கொடுசுகங் குறுகா
வளர்த்த தாற்சுகம் பெற்றன மெனமன மகிழ்வார். (கக0)

402 வழிந்த தேன்குவ ளைகணுகர் கவரிவண் டுறையூன்
கழிந்த வெள்வளை குடவயிற் றுக்கபால் கண்ணுற்
றிழிந்த ருந்துக வெனநுகர் கிள்ளைமீள் கெனவே
மொழிந்த மங்கையர் முன்கையுற் றளிக்குழூத் தமதே. (ககக)

403 என்னை யேவநீ முயன்றிலை யென்னவோ ரெகின
மன்னை நீதரு மமுதமுண் கிலனென வயரா
நின்னை நாளையே வுவலென நிகழ்த்திய தருத்திப்
பின்னை நாளதை யேவல்கொண் டிடுமொர்பெண் ணமுதம். ()

404 மேதி யுக்கபா லருந்திமீள் வேலைவீழ் கயத்தவ்
வோதி மப்பெடை யொருகழு நீர்கொணர்ந் துதவா
வேது பெற்றன மிதைவளர்த் திதன்முன்னென் றனமிப்
போது பெற்றன மெனமகிழ்ந் திருஞ்செவி புனைவார். (ககங)

405 நங்கை நன்கனி யருத்துவல் வருகென நயந்தன்
கொங்கை யுற்றவென் றங்கைமார் பினிற்குளிர் மூத்த
மங்கை பூட்டினை யெனக்கனிர் திலையென மறுப்ப
வங்கை யுற்றபைங் கிளிக்குமோன் றணிந்ததை யருத்தும் ()

406 மதும லர்க்குழ லியர்குழ மகட்குவால் வளையாற்
பதும மாமணி வள்ளத்துட் பான்முகந் தூட்ட
முதுமை யானிது பொருமையா மென்னவே முன்னிக்
கதுமெ னச்சுக மதனுள்வாய் வைத்துளங் களிக்கும். (ககரு)

407 களவு லாயகண் ணியர்கள்பா லடிசினன் கனியோ
டளவ ளாயருந் திறைவர்சே டமதருந் துதல்கண்
டுளமு லாயுட னுகர்கிளி மிச்சிலைமாற் றுதலும்
வளமு லாயபொற் கூட்டினுள் வைகும்வை கலுமே. (ககசு)

408 காவன் மாளிகைத் தலந்தொறு நங்கைமார் கருதுற்
றேவன் மாதரார் சுடர்விளக் கேற்றவே யெமதிற்
காவ தேதென நதிகொழித் தவிர்மணி யவற்றைக்
கூவி யஞ்சுகங் கொணர்ந்தமைப் பதற்குளங் குழைவார். (ககஎ)

409 தவள மாளிகைத் தமனியச் சுவர்த்தலத் தமைத்த
பவள சாளரக் குறுங்கண்ணுற் காண்பனி மதியங்
குவளை யுண்கணார் குழைமுகத் தெழிற்கிணை குன்றித்
துவள தாய்முளை மதியென விசும்பிடை சுழலும். (ககஅ)

410 எழுது மஞ்சனத் திணைவெறுத் தனரிமைத் திடுமப்
பொழுதி னுடவர்க் காண்பரி தெனப்புரி குழலார்
கொழுந ருந்துவ ரிதழினர் வதனமே குறித்தெப்
பொழுதி னும்மிமை யாதிமை யவர்களாய்ப் பொலிவார். (கககூ)

411 இசைத்த நாணம்வந் தடியிடுங் கன்னிய ரெடுத்தாங்
கசைத்த கைத்தலத் தடித்தபந் தயலொர்தே மாவில்
விசைத்த காலையிற் படர்தள வதைத்தடா விரைந்தத்
திசைக்க ணேக்கொடு நகையொடும் பூத்தன சிறந்தே. (கஉ0)

412 கற்றை வார்குழற் கன்னிய ருசனின் றூடச்
சிற்ற டிச்சுவ டெற்றலும் பூத்தன செயலை
வெற்றி வேள்கணை யாயுயிர் குறைக்குமே லிதெனு
வற்றை நாள்வினைக் கிற்றைநா ளுதைப்பதா யெனவே. (கஉக)

413 உத்த மர்க்குத வார்வினைக் குவமையுற் றனவா
மத்தி றத்தொடுஞ் சிலதிய ராட்டுதற் கெதிரே
செய்த்த கூந்தலா ருசலைத் தடுத்தநீள் சினைத்தாய்
மொய்த்த பாதிரி யிகழ்ந்திட மலர்ந்தன மூகைத்தே. (கஉஉ)

**வேறு.**

414 மகமொரு நூறு செய்தோன் மதிப்பமெய் வேதங் கற்ற
சுகமலி முனிவர் யாருந் துதிப்பவிவ் வண்ண மொண்மை
யகநக ரதனுள் வாழ்வோ ரலகிலா ரவருட் செல்வந்
தகவளர் புகழ்வே ளாளர் தமதுதா ளாண்மை சொல்வாம். ()

**வேறு.**

415 முழுவு போற்றிரள் புயவலி யுடையரா முயற்சி
மழவர் வைகலுங் கழனியுட் பழகில்வண் டமிழ்நூற்
கிழவர் சொன்னநாற் பொருள்களு மெய்துநற் கிழமைத்
துழவின் மிக்கதோ ருதிய மிலையென [1]வுவந்தார். (கஉச)

416 ஏவலாளரி னுழவற வுழுதெரு வினைமண்
மேவ லாநிலை யங்குரம் விழுமிதாய் விளங்க
நீவ லாம்வகை நீர்நிறீஇப் பட்டிக ணெருங்காக்
காவல் பூண்முனங் களைகளுங் களைகளை விப்பார். (கஉரு)

417 நன்னெல் வித்துபு நன்னெலின் குன்ற[2]மே னீளு
மின்ன வின்றியே விளைப்பவ ரென்பதே யேற்றங்
கன்னல் வைத்தபின் கன்னலின் கணுவில்வெண் கதிர்போன்
மின்ன லத்தவா நித்திலக் குன்றமும் விளைப்பார். (கஉசு)

418 மதிய மைந்துள மறைபுகழ் கடவுளர் மறையோர்
பதிய மைந்துவந் தளித்தபின் வைகலும் பாந்த
நதிய மைந்துள புனலினும் விளைத்தநல் வளமாம்
புதிய துண்பவர் சுற்றமும் விருந்துமின் புறவே. (கஉஎ)

---

[பி-ம்.] [1]வுணர்ந்தார். [2]மென் னாளு. சா.

419 இரவி னுல்வரு மம்மர்நோய்க் கேஜவா கியநல்
குரவி னைப்புறங் கண்டநன் மருந்தெனுங் குலத்தா
ருரவு நீர்நிலம் புரந்துளா ரிடனறிந் துதவொப்
புரவு மீங்கிவர் புரப்பதா னிகழுமொப் புரவே. (கஉஅ)

420 புயல்வ ளம்பெறப் பொழிதலிற் பொன்னகர் நிகர்ப்பான்
வயல்வ ளத்தினு லில்லறம் வளர்ப்பவர் வளத்தா
லயல்வ ளம்பெறு மென்பவா லந்நகர்க் கிணையா
யியல்வ ளம்பயில் புலவரெர் நகரிணை யென்பார். (கஉகூ)

வேறு.

421 சாதிநூ லோது விப்போர் தமக்கறப் புறமுஞ் சாதி
வேதியர் முதல்யா வர்க்கும் வேட்டவா றூட்டு தற்கா
யாதியோ டந்தஞ் சொல்வா னறப்புற மன்பி னல்கு
நீதிவே ளாளர் வண்மை நிகழ்த்து தற் கெளிதொன் றன்றே. ()

422 பாந்தளி னீரைஞ் ஞூறு பஃறலை பரித்த பாரமே
லேந்தெழி னகர்க ளெல்லா மிந்நகர்க் கிணையன் றென்றே
யாய்ந்தநூற் புலவர் கூறு மகநக ரதனுட் கல்வி
வாய்ந்தநூற்புலமைதோய்ந்தவணிகர்வாழ்வதனைச்சொல்வாம். ()

வேறு.

423 தனிமை யாற்றுவார் முனிவிலா ரிடர்த்தெளி தருவார்
புனிதர் கூறிய விதிவழி பொழுதொடும் புணர்வா
ரினிமை கூர்ந்துறு வதுதெரிந் திறுவதஞ் சாமை
நனியு மீட்டுதல் பகுத்தலெண் ணெண்குண நயந்தார். (கநஉ)

424 ஓதல் வேட்டல்வா ணிகமுழ வுறுபசுக் காவ
லாத ரித்துரை வாய்மையா தியவமைந் துடையார்
போத முள்ளவர்க் கில்லன புறத்துணர்ந் தில்புக்
கேதல் யாவரு முறுவகை வேண்டலி னீவார். (கநந)

425 பழைய காப்பியக் கவியின ருரைத்தமுப் பாலுட்
பிழையி லாப்பொருண் மேதகு வாணிகப் பெருக்காற்
றழைத வீட்டுவா ரீட்டிய பொருளினுற் றவவில்
விழையு மில்லற மின்பர்வீட் டின்பமும் விளைப்பார். (கநச)

426 அடுக்கி லிம்மியும் வாணிபத் துறையினி லழியார்
கொடுக்கி லாதுலர் முகமலர்ந் திடநனி கொடுப்பா
ருடுக்கை நீங்கினர்க் குதவுகைத் தலமென வொருங்கே
யிடுக்க ணுற்றவர்க் கிடும்பைதீர்த் திணங்கியே யிருப்பார். ()

427 அறத்தி னூற்றல்சா ரருந்தமி ழுரைபொருத் ததலாற்
புறத்தி னார்பசித் தனமெனு முரைசெவி பொருதார்
மறத்தி னுபவன் கண்மையாம் வெகுளியை மாபின்
றிறத்தி னுனினர் தறிந்திடாத் திருத்தகு தொழிலார். (கஙசு

428 அருந்து புன்பவி யடுதலில் லாவடுப் பினர்க்கும்
பொருந்த வின்னமிர் துறுசுவைக் கருனைநெய் பொழிந்தே
திருந்து நல்லறச் சாலைவைத் தில்லறந் திளைப்பார்
மருந்த ருந்தினும் விருந்தொடுண் டிடமன மகிழ்வார். (கஙஎ)

429 காமர் ஞாயிறு கடற்கடை பொடித்தெழுங் கடிகை
யேம மாளிகை மலர்த்தவி [1]சிடைத்துயி லெழுந்தே
நாம நாதனை வழுத்தருச் சனைநனி நயந்து
பூம னின்னமு தருந்திநீ ணிதியறை புகுவார். (கஙஅ)

430 சிறைப் படுந்திர ணிதியறை திறப்பவர் செலவே
யறைக்குள் வாணிலா வலம்புரிக் குலந்தெழிப் பனதான்
குறைத்தி னிப்புறத் தொன்றையு மிடல்கொணர்ந் தகத்தே
நிறைப்ப வேநிறைத் திடுகவென் றுரைப்பவா நினையில். (கஙகூ)

431 மட்ட விழ்ந்துள சீரகத் தார்புனை மார்பார்
விட்பு லம்புகழ் கொழும்பொன்னுற் சமைத்தவே திகைமே
லிட்ட மாமணித் தூணுறச் சார்ந்திருந் திரும்பொற்
பெட்ட கத்துறை நவமணித் தொகைதாம் பிறித்தார். (கசo)

432 சாலும் வேதிகைப் பொற்றகட் டருமணி தழீஇய
காலுஞ் சேர்ந்தன திருட்டிசெய் தளைதொறுங் கமலம்
போலுங் கண்களுங் கைகளுஞ் சேர்ந்தன புனைபூண்
வாலி தாமணி யருமணி வடமென வயங்கும். (கசக)

[பி-ம்.] [1]சிடைத்துயி. சா.

433 காள கக்கொழுங் காழகம் விரித்ததிற் கவிழ்த்த
வாள கத்தநித் திலக்குவை மழைமதி மருட்டுங்
கோள கைத்திரு மாழையங் குவையும்வை குறுதீர்
நாள கத்தெழு குணகிரிச் சுடர்பொரு நகுமே. (கசஉ)

434 பொன்னு மாடையுங் கவரியு மணியுநற் பூணு
மன்னு மாரநும் விடைசெய்வார் கொடுவர மயங்கி
யுன்னு போழ்திவை பிறந்தமா நகரெலா மொருங்கே
துன்னி யோரிடங் கொண்டதா மெனவளந் தோன்றும். (கசங)

435 சிற்ப மாமணித் திருவுட ஞயிறு திங்கள்
பொற்ப தாறுதற் புல்லகங் குண்டலப் பொலம்பூண்
கற்ப கத்தரு வீன்றபொற் கவினுலாங் கலன்கள்
விற்ப ரங்கவற் றினுக்கியார் விதிப்பவர் விலையே. (கசச)

436 அரும ணித்திரள் வாகுவின் வலயமோ டதன்கீட்
பெரும ணித்திரட் கைவளை யுதரபெந் தனங்கைத்
திருவி ரற்கணை யாழிகள் கிண்கிணி திரண்ட
பரும ணித்திர ளுள்ளிடு பரிபுரம் பகர்வார். (கசரு)

437 கண்ட மொன்பதோ டேழ்பெருந் தீவிலோர் கடலுட்
கண்ட முத்தொட னிடையிடை யருமணி கலந்த
கண்ட மாலைகள் வச்சிர மாணிக்கக் கடகங்
கண்ட மக்கிமைப் பரியருங் காமுறப் பகர்வார். (கசசா)

438 புஞ்ச நாரிக ளோர்புற மோர்புறம் பாய்மாக்
குஞ்ச ரத்தொழி லோர்புறங் கோதைமா ரெழுவ
ரஞ்சி லோதிய ரொன்பதா மோர்புற மதுதேர்
விஞ்சை பெற்றபட் டாடையா டகத்துகில் விற்பார். (கசஎ)

439 ஏம மேதகு வடங்களே ழெட்டொடெண் ணிரண்டாங்
காமர் கூர்மணி மேகலை காஞ்சிநன் கலாபந்
தாம மொன்பதிற் றிரண்டொடெண் ணான்கெனத் தகைசால்
பாம மாண்பரு மமும்*விரி சிகையுமே பகர்வார். (கசஅ)

---

*ஏடுகளில் இரிசிகை என்று காணப்படுகிறது.

440 சிகர மால்வரைப் புலத்தினு நிலத்தினுந் திமிர
மகர வெண்டிரைத் தலத்தினுங் கொணர்ந்தவான் பண்டம்
பகர்ந ரோதையுங் கொள்ளுந ரோதையும் படைக்கென்
றிகலி மன்னவ ரெதிர்ந்தபா சறையொலி யெழுமே. (கசகூ)

441 அருமை யாகிய மறுமையாக் கழுமிவ ணடைந்த
வொருமை யுட்பெறு முத்தம வணிகர்வாழ் வுரைத்தேம்
பெருமை நானிலம் புகழ்திரு நகரினுட் பிரியாத்
தரும மன்னவர் வாழ்வினி யுரைப்பதே தரித்தேம். (கரு0)

வேறு.

442 பெருகுலப் பிலவாம் பாற்கடற் குணபாற்
பிறங்கலிற் பிறந்திரு ளிரிய
வருகுலக் கதிரோ ராயிர முயிர்ப்போன்
மாசிலாக் குபேரனென் றுரைகூ
றிருகுலத் துதித்த மூவரா மவரும்
யாதவர் மரபினுற் றவருங்
குருகுலத் தவரு மெனமதிப் பனவாங்
கோதிலாத் தொல்குலத்தவரே. (கருக)

443 விற்கையான் மேரு வினிற்பொறித் தவன்போர்
வேங்கையைப் பொறித்தவன் கயலை
யற்கையாற் பொறித்தோ னெனுமிவர்க் குரிமை
நகர்கடாம் வஞ்சியும் புகாருங்
கொற்கையு மெனப்பேர் குறிப்பினும் வளர்ந்த
குலாக ரிஃதெனப் புலவர்
நற்கையாம் படிக்கில் லறம்பயின் றனராய்க்
கடிமணக் கிழமையே பயில்வார். (கருஉ)

444 உத்தர குருவிற் குபேரனு மமர்த
மோக்குபோன் னகர்ப்புரந் தரனும்
பைத்தலை யுரகர் பதிபுரந் தவனும்
பாரிலந் தாமமீ தெனவே

முத்தியை விளைத்தற் கிருசுடர் மரபின்
மூவரா தியரென முனைநாண்
மெய்த்தவம் பயின்றுங் கடைந்தவாழ் வெனலாய்
வேந்தராய் மாந்தர்வாழ் வதவே. (௧௫௩)

445 இடனுணர்ந் தடக்குங் காலமுங் கருவி
யென்பவும் பழுதெண்ணு மதியி
னுடனுணர்ந் தியற்றுஞ் செய்கையுந் தெளிந்த
வுரனுடை யருவினை யமைச்சர்
திடனுணர்ந் துணர்வி னளவளாய்த் தமவாந்
திரிபுவ னமுந்தழை தருமக்
கடனுணர்ந் தவர்கள் பரிப்பவே யெண்ணெண்
கலையொடும் பொழுதினைக் கழிப்பார். (௧௫௪)

446 பஞ்சகல் யாண னெனுங்குலப் புரவி
பாடல்சால் கவுண்மதக் கலுழிக்
குஞ்சரம் பசும்பொற் கொடிநெடுந் தேர்கள்
கூற்றமு நடுங்கவே பொரும்போர்க்
கெஞ்சலில் பொருநர் விருத்திகைக் கொண்டோ
ரெண்ணில வெண்ணிலா ரிவர்பால்
வெஞ்சமத் தெதிர்வார் புறந்தரு வதலான்
மீண்டவர் விறல்விளைப் பவரே. (௧௫௫)

447 குறும்பர்மேற் றானைத் தலைவரை யேவிக்
குறும்பினை யடக்குபு திறையாய்ப்
பெறும்பொருள் யாவு மொருவழித் திரட்டிப்
பிழைபடாக் காவல்கூர்ந் தவற்று
ளுறும்பய னுயிர்க்கிங் கிவையெனப் புறத்த
வுபயமும் பிறந்திறப் பவற்றைத்
தெறுந்தொழில் புரிபே ரின்பமும் விளைக்குஞ்
செய்கையுங் கடைப்பிடித் தவரே. (௧௫௬)

448 நிரப்பிடும் பையினு லிரப்பவர் நிரப்பை
நீக்கவு நிதியொடுங் கிளையா
லுரத்தவர் தனித்த வெளியரை நலித
லுளதெனி லொழிக்கவும் வெளியில்
வரத்தருங் காட்சிக் கெளியராய்க் கடுஞ்சொன்
மறந்தினி யவைபுகன் றகிலம்
புரப்பவர் புலவர் புதுமொழி புணராப்
பொழுதவப் பொழுதென வெறுத்தார். (கருள)

449 தேவர்பூ சனைக்கு மாதிவே தியர்க்குந்
தேசிக ரெனத்திருந் தினர்க்கு
மாவதாந் தானங் காலையிற் புரந்து
மாழ்புன லாழ்ந்துமன் னுயிர்க்குக்
காவலா முகுந்தன் றனையருச் சனைசெய்
கருமமு நிகழ்த்திநன் பகற்கண்
பாவலோர் முதலாம் விருந்துட னமிர்தம்
பரிந்திருந் தருந்துபான் மையினர். (கருஅ)

450 இசைகுலாங் கமல மலர்மகள் பிரியா
விறைவனை வழுத்தியே யிறைவர்
நசையினு லாரா தனைபுரி வதற்கு
நயந்தவர் வலக்கையா லெடுத்து
வசையுறு தசைப்ப வசைமணி யவர்தம்
வாயிலின் வைத்தமா மணியை
யசைவிலா மணியாக் கியதையற் புதமென்
றகிலம்யா வையும்புகழ் தருமே. (கருகூ)

451 ஒல்லுமன் னுயிர்கட் குயிர்களா மெனவே
நிச்சயித் தாறிலொன் றெனலா
நல்வினை யதனு லடைந்தநெற் குவையை
நானில மவற்றுளெண் டிசையும்
பல்வகை பெறச்சே மித்தபின் னுலகிற்
பசிப்பிணி யுதிற்றணி மருந்தாய்
மல்குவ தாகப் புரத்தலாற் கருணை
மன்னராய்க் கிளைத்தபான் மையினர், (கசுO)

452 இறைவனு லிறைவர்க் கமைத்தவாண் டைம்பா
னிரட்டியே யெனினுநீ டூழி
நிறைவதா குகவா யுளும்பெருந் திருவு
நீடுக வென்னநல் லறஞ்சார்
பொறைவலா ராசி புகலவில் லறத்திற்
பொற்புடை மனைவிய ரொடும்வாழ்
முறைவலார் களுங்கண் டுயிலெழு பொழுது
முகுந்தனை வணங்கிவாழ்த் துவரே. (கசுக)

453 அறத்திய லிழுக்குங் கொலைபபி மான
மழித்திடுந் தொழிலிவை யரசர்
பிறப்பினை நினைந்து கனவினு மணுகாப்
பெற்றியார் தீமையொன் றிலவா
மறத்தினுக் குரிய படைபல பயிற்சி
வாரணம் புரவிதேர் கடாவல்
சிறப்புறப் பயில்வார் பகைவர்மாட் டினுக்குச்
சினமுறு நமனெனுந் திறத்தார். (கசுஉ)

454 பிறக்கொடை யுணர்வாற் றமைப்பரி பனைக்கைப்
பெருமலை திசைசெல வெருவிப்
புறக்கொடை புரிந்து தளர்ந்ததிக் கயங்கள்
பெறையுறீஇப் புயத்தினுற் றரித்தோ
ரறக்கொடை யினைக்கண் டிந்திரன் முதலோ
ரன்புறக் கயிலையா ளியுமெய்
யுறக்கொடை யலுக்கு முணர்த்துவன் கரியை
யுரித்துடல் கவித்ததில் வியந்தே. (கசுந)

455 ஆரியர் மதித்த மனுமுத லியநூ
லாசியற் கமைந்ததே நடாத்துங்
கூரியர் கொடைதண் ணளிகுடி போம்பல்
குறைவறக் குடிகொளுங் குணத்தார்
காரியங் கருதி யுலகினுக் கிவரே
கடவுள ராமெனக் ககன
மாரியு மவர்தம் மேவன்மேற் கொளுமான்
மதிப்பதா ரவர்பெரு மையையே. (கசுச)

456 புதல்வரெண் ணிரண்டாண் டமைந்தகா லையினிற்
பொன்முடி யவர்சிரத் தமைத்து
முதல்வராந் தானைத் தலைவரை யவர்பின்
முத்திரை கொடுத்தியக் கியபின்
றிதலைவெம் முலைமா ணிழையொடும் வனத்துட்
சேறலு மவணிருந் தனரா
யதலமா தியவு மேலுல கமுங்கண்
டன்புறத் துறவறம் பயில்வார். (கசரு)

457 வேத்தியல் பதனை வழுவற நடாத்தும்
வேந்தர்வாழ் வினையுரைத் தனன்மேற்
கோத்திர முணர்ந்தக் கோத்திரந் தனக்குக்
குலமுறை வழுவற விதித்த
சூத்திர முணர்ந்தச் சூத்திர மியற்றச்
சுருதியு மிருதியு மெனச்சால்
சாத்திர முழுது முணர்ந்தவே தியர்தந்
தன்மையே புகழ்ந்திடச் சமைந்தேன். (கசுசு)

வேறு.

458 ஆதி நாதப்பெம் மானொடு மாதியென்
றோது மைம்பத் தொருசபை யாமென
நீதி யைம்பத்தொ ரக்கர நீணிலச்
சாதி வேதிய ராய்வளர் தன்மையார். (கசுஎ)

459 அழக ராதியென் றைம்பத் தொருவராங்
குழகர் கூடலிற் கூடிய கொள்கைபோற்
பழகு மாநகர் பண்பயில் வேதநூற்
கழக மாமெனக் கல்வி பயின்றுளார். (கசுஅ)

460 பழம ரத்தொழு திப்படர் கொம்பர்போற்
குழுமு பற்பல தொல்குடி கொண்டதோர்
விழுமி தாமிரண் டில்லினர் மேதகு
பெழுதோ ணுமறை பெந்தை குலத்துளார். (கசுசு)

461 கொற்ற யானைக் குதவிய கொள்கையா
னற்ற யாவொடு நான்மறைப் பிள்ளையைப்
பெற்ற யாய்வளர்த் தேயதன் பேறெலா
முற்ற யாயிவ ரென்னு முலகமே. (கஎ0)

462 போத மேதகப் பூரணன் பூமகள்
காத லானெனக் கண்டவர் மாளிகை
வேத வாய்மையு மெய்த்தமிழ் வாய்மையுங்
[1]கீத வாய்மையுங் கிள்ளை மிழற்றுமே. (கஎக)

463 அந்த ணாள ரருமறைச் சந்தைதம்
மைந்தர்க் கீந்திட மாநத பூசையுற்
றயர்ந்த தாலவர்க் குற்ற மறவியைச்
சந்து செய்துணர்த் தும்மனைத் தத்தையே. (கஎ௨)

464 நன்றி வேதியர் நன்பொனசெய் மாளிகை
முன்றி லெங்கு முழங்குவ வேதமும்
வென்றி மெய்த்தமிழ் வேதமும் வைகலு
மன்றன் மாலை முரசும் வளையுமே. (கஎ௩)

465 ஆழ்ந்த வேதம தோதி யறிஞர்பாற்
றாழ்ந்து நல்விருந் தோம்பித் தயாவுடன்
வாழ்ந்த நாளினை வேண்டுவர் மற்றைநாள்
வீழ்ந்த நாளென வேவெறுப் பார்களே. (கஎ௪)

466 பொற்க லத்துட் கருணைநன் போனக
நற்க னித்திரள் கூட்டிநன் பாலளா
யற்பி னூட்ட வதிதியர்த் தேடியே
நிற்ப ரீதவர்க் கென்று நியமமே. (கஎ௫)

வேறு.

467 இரதமை யிரண்டு திசையினுஞ் செலப்போ
ரியற்றிய வேந்தல்கண் மணியாய்ப்
பாதன்மன் னுயிராம் பானடி விளக்கும்
பவித்திரப் புனலொடு துளவுஞ்

[பி-ம்.] [1]கீதை. சா.

சாதமுற் றருந்தி யுவவுமட் டமியுஞ்
சான்றவர் மதித்தசால் புடைத்தாம்
விரதரா சனையு மன்னரா தியரும்
விரும்பநோற் றருளும்வித் தகத்தார். (கஎசு)

468 யானென தென்னுந் தொரந்தம திகந்தே
யிறைவனை யனுபவ தனுவான்
மானத பூசை புரியுமுத் தமர்தம்
வயிற்றிடை யக்கினி தணிப்பான்
கானிடை புகாது நாட்டிடைச் சரித்தல்
காருக பத்தியத் திவர்நற்
றூனம துடன்றண் ணளிகுறித் தெனவே
சந்தய மறவுல குணர்த்தும். (கஎஎ)

469 பருதியைப் பரித்த வெழுவுறழ் வலக்கைப்
பான்புக ழுதனையே பரப்புஞ்
சுருதியை முனைநாட் பொறிப்பதின் றூய
சூழ்ச்சியீங் கிவரித யமதே
கருதுகிற் செப்பே டாமெனக் குறிக்கொள்
காட்சிகொண் டென்றுதே சுடைத்தா
மிருதியை யுணர்ந்தோர் வைகலு நினைந்து
வியப்பதா மவர்கடா ரணையே. (கஎஅ)

470 சயம்புவாஞ் சுருதி சதுர்பெற விரித்த
தத்துவ மூன்றிலுண் மையவாம்
பயன்றெரி தலைமைப் பாரசர் வியாதர்
பழிப்பற வடமொழி யதனு
வியம்பிய புராணம் பொறித்த பொத்தகங்க
ளியற்றமிழ் பொறித்த சீகோச
முயர்ந்தவர் விரும்பப் புரந்துமெண் ணிலவா
யோங்கிய நிதியறை யுடையார். (கஎகூ)

471 கருதிவை கறையிற் [1]றுயிலுணர்ந் தசிதக்
கடன்கள்யா வையுங்கழித் ததற்பின்
பருதிவந் தெழுமுன் புனல்படிந் தரையிற்
பயிலுநுண் டுகிலொடுத் தரியம்
பொருவில்பொற் றேட்கொண் டுதிக்குமப் பருதிப்
பொருபகை பொடியெழப் புனிதச்
சுருதி கற்றுளவாம் பலவகைக் கடவுட்
சொற்பொரு ளுரையவற்றி னெடும். (கஅ0)

472 காலையின் முகமோர் நான்கொடுங் கமலக்
கடவுளாய்க் கடும்பக லினொடு
மாலையி லுமையாள் பாகனும் வடிவின்
மலர்மகள் காந்தனு மெனலாய்
வேலைசூழ் புவன மதனின்முப் பொழுதும்
விளங்குகா யத்திரி முதல்போற்
சோலைசூழ் புவனத் தவர்துதித் திடவே
துதித்துமீட் டிறைவனைத் துதிப்பார். (கஅக)

இரண்டுந் தொடர்.

வேறு.

473 தாவி லாவந் தாத்திண் சிலைதழீஇ
வீவி லாத்தனு வேதியர் மேன்மையா
லேவி வெஞ்சுட ரோன்பகை யிற்றதா
லோவில் வான்புன லம்பென்ப துண்மையே. (கஅ௨)

474 மூன்பு [2]பாதையோர் மூன்றெனத் தோன்றுறா
ப்பின்ப மூற்றவ ரேத்த விசும்பின்மே
லன்ப கற்கண் வதிப்பது நாயிறுன்
மன்ப தைக்கவர் தெய்வ மதிக்கிலே. (கஅ௩)

[பி-ம்.] [1]றுயிலெழுந். ச. [2]பாகை. ச.

வேறு.

475 தாய ரீன்ற நான்முதலாய்த் தாதை மார்க ளேயிருநாட்
டேய வாசின் வடபுலஞ்சார் துண்டச் சினையைக் கொண்டதன்மே
லாய சினையுத் தாரணியென் றமைதா லுவினை யதன்கீழென்
றேய வதரா ரணியினைவைத் தியற்று முறையிற் குறையாதே.

476 பேணிக்கடைந்தபொழுததனுட்பிறந்தழலாற்சடங்கமைத்துப்
பூணிற் சிறந்த முப்புரிநூல் புனைந்து தயனும் பருவமுநீ
டாணித் தழலென் றதைவிதியா லரங்கு மமைத்தில் லறத்தமைந்தோர்
காணிற் களிப்பக் கைப்பற்றுங் கடிவேள் விக்கு மமைத்தனராய்.

477 வட்ட வடிவர் தனுவடிவம் வனைந்த சதுரச் சதுரமெனத்
தொட்டகுண்டத்தினுளொன்றுய்ச்சொருபமூன்றுந்தழலவற்று
ளிட்ட முடன்சம் பந்தமுற யாக மங்கிட் டோமமெனப்
பட்ட தாதி மாகிது வீரு நூறும் பழிப்பறவே. (கஅசு)

478 காமர் பலாசு வன்னிகருங் காலி வில்வ மதவெனலா.
மோம விறகின் மந்திரதந் திரமென் பவையு மூலோபாமற்
சாமை விரீஇநெய் தயிர்முதலாத் தாபித் திடமோ குதிதிருமால்
பூமன் கையிற்பா வகன்புரப்பப் புத்தே ளிரையு மூண்பிப்பார்.
இவை நான்குந் தொடர்.

479 தேவ ரெனவாழ் பவர்பலருட் சிறப்பித் துரையா குதிக்குரிமை
யாவ ரெனுமக் கடவுளரை யாகவ னீயத் தனுதுகவென்
றேவல் புரிந்தின் னமிர்தூட்டி யிச்சித் தனவிக் கலியுகத்துங்
காவ லெனநேர்ந் தவர்புரப்பக் கைக்கொண் டுலகிற் கருள்புரிவார்.

480 ஆதிப் புனித வைதிகமார்க் கமதா யமைத்த தழல்சிறிதுங்
காதிக் கடுங்கா லொடுபுனலுங் கவ்வும் படிமுற் றறியாவா
னீதிப் பானன் னகர்க்களித்த நிலைபே றதற்கு மளித்தனனே
சாதித் திருமந் திரமளித்த சால்போ பயந்த தனிக்கடுங்கால். ()

481 ஈன்றூர்மகவினுயிர்செகுப்பதியல்பன்றெனவெண்ணியதோநீர்
தான்று யரைப்போற் றுதடுகிற் சலமா மெனத்தா பித்தனவோ
வான்றும் முனிவர் தமக்கிருகண்மணியாமறைபோருறுதவமோ
தோன்றுதெவனேகித்தியமாய்ச்செலித்தன்குரிக்குந்தொடர்பினவே.
இவை யிரண்டுந் தொடர்.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| *7. | தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| * | சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் ... ... | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## சேந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 8 | 0 |
| 2. | கணநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலை நூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... | 0 | 8 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28.* | சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | 1 | 0 | 0 |
| 30. | ஞானமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திர நூறுபாட்டுக்குரை ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் ... ... ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு ... ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ. 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.